40/4



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாயபரம்பரைமேலைச் சிதம்பரம்

ஸ்ரீமத்

# மௌனசுவாமிகள்

இயற்றியருளிய

# திருவருட்பா.



இஃது

ஸ்ரீ-திருவாரூர்

ம-௱-௱-ஸ்ரீ, வே. நாராயணசாமிபிள்ளையவர்களால்

பிழையறப்பரிசோதித்து,

பலர்வேண்டுகோளின்படி

சென்னை:

மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

ஏவிளம்பி௵ - புரட்டாசிமீ

1898



# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௪ | ௯ | ௨ | சடைப்புண்ணியன் | சடைப்புண்ணியன் |
| ௫ | ௨ | ௩ | சூடித்கிரு | சூடித்திரு |
| ௯ | ௨ | ௨ | யணளல் | யண்ணல் |
| ௧௧ | ௩ | ௧ | மதுரைச்கு | மதுரைக்கு |
| ௨௨ | ௪ | ௩ | ராசையினு | ராசையினுல் |
| ௩௰ | ௩௰ | ௪ | ராற்றேன் | ஆற்றேன் |
| ௪௩ | ௮ | ௪ | யாரூா | யாரூர் |
| ௬௮ | ௩ | ௨ | றப்பிபே | தப்பியே |
| ௬௨ | ௧ | ௬ | திண்ணமாயனை | திண்ணமாயுனை |
| ௬௩ | ௨ | ௩ | ஆகி | ஆதி |
| ௭௰ | ௮ | ௬ | கேரயினின் | கோயினின் |
| ௭௧ | ௫ | ௪ | தோளிகயாடு | தோளியோடு |
| ௭௫ | ௭ | ௩ | மனனெனுங் | மனமெனுங் |
| ௯௰ | ௨ | ௩ | கடந்தபபாலாய் | கடந்தப்பாலாய் |

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பா.



## திருக்குறுந்தொகை.

சிற்பரத்தைச்சிவனைவன்சேயினை
வற்புறுத்திவணங்கியெந்நாளுமே
நெற்பொரியப்பநெய்களுநெப்பிய
சற்பகத்தைக்கருத்தினுளேத்துவாம். (க)

புற்புரத்துப்புகழுநன்மேற்றிசை
தற்பரத்துத்தனித்துணையாகுவ
அற்புதத்தவனைவருமேத்துறுங்
கற்பகத்தனியானைக்சழல்களே. (உ)

பத்தியாகப்பரவித்தொழுமினே
முத்தமிழ்தருமுப்பொருளாயவன்
முத்தியின்வழிமுன்னின்றுகாட்டுவென்
சித்தியானைசிவனருட்செல்வனே. (ஙு)

---

## முருகேசர்துதி.

முப்பொருண்மாமணிமுக்கணற்கிளையவ
னப்பனுமாமெங்களாறுமுகத்தனைச்
செப்பொணுச்சோதியைத்தினந்தினமேத்தத்
தப்பாதுசாயுச்சியஞ்சண்முகத்தாணையே, (க)

ப்பபறவீட்டினின்றும்பரமனைத்
துப்புறவாகவேதூண்டித்தொழுமினே
மெய்ப்பொருளாகியமெய்யன்முருகனை
யெப்பவுநினைப்பவர்க்கெமனிடரில்லையே. (௨)

முத்தனாயங்கனேமுதல்வனார்க்கோதிடும்
அத்தனுமாமெங்களாறுமுகத்தனைப்
பத்தியாயுள்கிப்பாடவல்லீரேல்
சித்தியுமுத்தியுஞ்சீக்கிரங்கூடுமே. (௩)

திருப்பரங்குன்றத்தின்மேவியதேவனை
விருப்பமதாகவேண்டித்தொழுமினே
கருப்பத்தில்வீழாதுகட்டறுத்தாளுவான்
இறப்பதும்பிறப்பதுமெந்நாளுமில்லையே. (௪)

செந்தினின்மேவியதேவர்கள்தேவனாந்
தந்தையாகியதலைவர்க்குஞானந்தைச்
சிந்தையிலோதியசேவகன்பாதத்தைப்
புந்தியிலேத்திடப்போகுநம்வினைகளே. (௫)

ஆவினன்குடியினிலமர்ந்தவண்ணலைத்
தாவித்தினந்தொறுந்தாள்பணிந்தேத்தக்
கூவியேவந்தவன்குருவுருவாகுவன்
ஆவிக்குமழிவில்லையரணையுண்மையே. (௬)

தூமணியாய்நின்றுசூரரைவென்றவன்
சாமிநாதனாஞ்சண்முகத்தண்ணலைக்
காமனைவென்றிடக்கருத்தினுள்ளேத்திப்
பூமலர்சாத்திடப்போகுநம்வினைகளே. (௭)

குன்றுதோறாடியகுருபரன்குமரனைச்
சென்றுநன்றாகத்திருவடியேத்துமின்
வென்றுபுலன்களைவேரறுத்தோட்டுவென்
என்றுந்தொழுபவர்க்கெமனிடரில்லையே. (௮)

சோலைமலைதனின்மேவியசோதியைக்
காலையுமாலையுங்கருத்தினுளேத்துமின்
நாலுடன்சாதனநன்றாகவருகத்
தோலுடலகற்றித்துரியமதாகுமே. (௯)

திருச்சிற்றம்பலம்.

---

## கோயில் திருக்குறுந்தொகை.

---

திருச்சிற்றம்பலம்.

முத்தர்கட்கோதிடுமூவுல்காயவன்
சித்தர்கள்தேவர்கள்திருவடியேத்தவே
உத்தமவானந்தத்தாண்டவமாடுவோன்
அத்தனையடியேன்மறந்துய்வனோ. (௧)

கூத்தனையுதைத்தவன்குற்றாலர்தண்ணல்
மூத்தவனாகியேமூவுருவானவன்
ஆத்தியைச்சூடிநின்றாடுமவன்கழ
லேத்தியேயெளியேன்மறர்துய்வனோ. (௨)

முப்புரத்தையெரிந்தமுதலவன்
மைப்படிந்தமலைமகள்பாகனு
மப்புரத்தினின்றாடுமவன்கழ
லெப்பவுமெளியேன்மறந்துய்வனோ. (௩)

சோதியாகிச்சுடலையிலாடுவான்
பாதிமாதொடும்படர்சடைப்புண்ணியன்
வேதியனாகியவிரிமலர்க்கொன்றையா
னாதியையடியேன்மறந்துய்வனே. (௪)

முப்பத்துமுக்கோடிதேவர்க்கதிபதி
செப்பொனாற்றில்லைமேவியசேவக
னொப்பிலானவனுலகெலாநின்றவ
னப்பனையடியேன்மறந்துய்வனே. (௫)

அங்கணாளனனலெரியாடுவான்
றிங்களணிச்சடைச்சென்னியன்சேவடி
யெங்குநிறைந்தவனேழுலகாகிய
மங்கைபாகனைமறந்துநானுய்வனே. (௬)

பேணுவார்க்கருள்பின்சடைப்பிஞ்ஞக
னாணும்பெண்ணுமாயண்டநிறைந்தவ
னாணிபிச்சையென்றூரெலாமேற்ற
தாணுவைத்தமியேன்மறந்துய்வனே. (௭)

எட்டிரண்டுமாகியவீசனும்
பட்டிசைந்திபோவையாள்காணவே
யெட்டிசைக்குநின்றுமேவன்சழற்
சிட்டனைச்சிறியேன்மறந்துய்வனே. (௮)

எண்ணுமாயெழுத்தாகியவிறைவனும்
பண்ணுமாயவன்படர்சடைப்புண்ணியன்
கண்ணுமாயெங்குங்கனலெரியாடுவா
னண்ணலையடியேன்மறந்துய்வனே. (௯)

ஆறுமுகத்தனுக்கப்பனுமாகியே
நீறுபூசிநின்றுமேவன்கழல்
வாறுபூண்முலைமங்கையுந் தானுமா
யேறுகந்தெனையாட்கொண்டபாதமே. (௪௦)

திருச்சிற்றம்பலம்.

## கோயில் திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

சேலனகண்ணினாள்சேர்ந்திடும்பாகத்தன்
காலனைக்காய்ந்தவன் காட்டெரியாடுவோன்
மூலமுதற்பொருண்முச்சுடர்ச்சோதியை
ஆலனையடியேன்மறந்துய்வனோ. (க)

கொங்கைதங்கியமங்கைபங்கனுங்
கங்கைவேணியன்காளகண்டனுந்
திங்கள்சூடித்திருநடமாடியை
எங்களையனையெப்பவுந்தொழுமினே. (உ)

ஒன்றுமிரண்மொயுலகெங்குநின்றவன்
மன்றினிலாடுவான்மங்கைமகிழ்ந்திடச்
சென்றுகண்டவர்தேவர்க்குந்தேவனுங்
கன்றுபோற்கசிந்துகருதித்தொழுமினே. (ங)

கோணைப்பிறைகங்கைகொன்றைசூடியைப்
பாணுலாவியபல்லுயிர்ப்பரமனைச்
சேணுலாமலர்ச்சிற்சபையண்ணலைக்
காணக்கசிந்துருகித்தொழுமினே. (௪)

அண்டங்கடந்துநின்றப்புறத்தாடுவான்
கெண்டையங்கண்ணியாள்கண்டுமகிழ்ந்திடக்
கண்டங்கறுத்தவன்கப்பரையேந்தியைக்
கண்டுதினந்தொழக்கன்மங்கள்தொலையுமே. (௫)

மூனுமிரண்டதாய்முச்சுடரொன்றதாய்ச்
சேனுங்காலதாய்த்தேய்வப்புமண்ணதா
ஊனுமுறக்கமாயுடலுயிரமைத்திடுக்
ஆனுவைத்தமியேன்மறந்துய்வனோ. (௬)

நாட்டமாகியநான்மறைக்காடனைத்
தேட்டமாகியதேன்பழச்சுவையினை
ஆட்டமாடிடுமற்புதப்பதத்தைக்
காட்டியாட்கொள்வன்கருதித்தொழுமினே. (௭)

பூதங்களஞ்சுமாம்பொறிபுலக்கோள்களைக்
சேதங்கெடுத்தென்னைக்கிருபைதந்தாண்டவன்
நாதங்கடந்துநின்றாடுநம்பனார்
பாதங்களேத்திப்பணிந்துதொழுமினே. (௮)

ஊனத்தைக்கழித்துநின்றாடுமுத்தமன்
ஞானத்தைக்காட்டிநம்மையாட்கொண்டவன்
மோனத்தைக்காட்டுவான்முப்பாழுக்கப்பாலாய்
ஏனத்தையெய்தவனிணையடிதொழுமினே. (௯)

நோக்கித்தென்பாறூற்றெட்டிலொன்றதா
யாக்கியிருவரையண்டமமைத்திடத்
தூக்கியபாதத்திற்றொண்டர்களுய்யவே
காக்குங்கடவுளைக்கருதித்தொழுமினே. (௧௦)

ஒப்பிலாரெனன்றதாயுலகெங்குநின்றவன்
அப்பனுமம்மையுமமர்ந்திடுமெவுனத்திற்
றுப்புறவாகவேதோன்றியபாமாலை
எப்பவும்படிப்பவர்க்கெமனிடரில்லையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

# திருவண்ணாமலை திருக்குறுந்தொகை.

---

திருச்சிற்றம்பலம்.

அன்னம்பாலிக்குமண்ணாமலையனைக்
கன்னன்மொழியம்மைகண்டுகண்காட்ட
யென்னன்புருகியென்னுருக்கண்டபின்
றன்னந்தனிமுதற் றற்பரமானதே. (க)

அரியயன்றேடியறியொணாப்பதத்தைப்
பிரியமாய்க்கனவிற்பேணித்துதித்திடத்
துரியமதாகியசோதியுந்தோன்றுற
நரிபரியாக்கியநாதனாராணையே. (உ)

அண்டமாமுனிவர்களண்ணாமலையனைக்
கண்டடிபணிந்துட்காட்சியைக்கண்டன
ரெண்டிசையெங்குமாயேகமாகிய
வண்டனைத்தினமடிபணிந்துய்மினே. (ங)

ஆவிக்கருந்துணையண்ணாமலையனைக்
காவியங்கண்ணியாள்கண்டுமெகிழவே
ஓவியச்சோதியையுள்கித்தினந்தொறும்
பாவித்துப்பாடிப்பணிந்துதொழுமினே. (ச)

ஆலங்காட்டாடியவண்ணாமலையனைக்
காலனைக்காய்ந்திடுங்கண்ணுதலெந்தையை
வேலைசூழ்விடமுண்டவித்தகந்தண்ணலை
யோலமென்றேத்தியுள்கித்தொழுமினே. (௫)

அரத்தமேனியனண்ணாமலையனைக்
கருத்தினிலேத்திக்கசிந்துளமுள்கத்
துருத்தியினுள்ளொருசோதியுந்தோன்றிடுந்
திருத்தமதாகச்சிவபதமுண்மையே. (௬)

அளவுக்கெட்டாதவண்ணாமலையனைக்
களவுகணீக்கிக்கசிந்துளமுருகவே
உளமதிலுற்றிடுமுத்தமனாகிய
வெளியினுள்வெட்டவெளியதாகுமே. (௭)

ஆரூருற்றிடுமண்ணாமலையனைக்
காரார்கழுக்குன்றமேவியகத்தனை
யேரார்முப்புரமெரித்தவீசனை
நேராய்நைந்துளநினைந்துதொழுமினே. (௮)

அம்பலத்தாடியவண்ணாமலையனைக்
கம்பமற்றதோர்காளகண்டனைச்
செம்பொனைக்கண்மணித்திருவருட்சோதியைய
நம்பனைத்தினந்தொறுநாடித்தொழுமினே. (௯)

பெருத்திடுமுடலுயிர்பிரித்துநோக்கி
யருத்தனாகியவண்ணாமலையனைக்
கருத்தினுளேத்தியென்னொளிகண்டது
மொருத்தனையன்றியுலகமதில்லையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருவண்ணாமலை-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

உடையானவனுயிரானவனுலகுக்கொருதலைவன்
அடையார்புரமெரித்தோனவனண்ணாமலையண்ணல்
விடையேறிடும்பெருமானெங்கள்வினைதீர்த்திடும்பெரியோன்
சடையானெனதுள்ளமவர்சலியாப்பெருந்தகையே. (௧)

ஊனாகியுமுயிராகியுமுலகிற்பதியொருவன்
ஆனானவனுடலிற்கலந்தண்ணாமலையண்ணல்
தேனார்மொழியுண்ணாமுலைத்தேவிக்கொருபாகம்
ஆனானவனடியார்க்கருளையன்பெருந்தகையே. (௨)

எட்டாதவனேத்தாதவர்க்கெந்தைபெருந்துறையான்
அட்டார்புரமூன்றுமெரியண்ணாமலையண்ணல்
மட்டார்குழலுண்ணாமுலைமங்கைக்கொருபாகம்
இட்டாரவரெளியேற்கருளெங்கள்பெருந்தகையே. (௩)

எண்ணாகியுமெழுத்தாகியுமெந்தைபெருந்துறையான்
பண்ணாகியும்பதியானவன்பரமன்பரமேட்டி
யுண்ணாமுலையம்மையொருபாகமுடையொருவன்
அண்ணாமலையென்போர்க்கருளையன்பெருந்தகையே. (௪)

பொருளானவன்புவியானவன்பொருளுக்கொருதலைவன்
அருளானவனொளியானவனண்ணாமலையண்ணல்
மருளாலெனைநுழையாவழிமதிதந்திடும்பெரியோ
னருளாமவனடியார்க்கருளையன்பெருந்தகையே. (௫)

கண்டார்க்கவன்பகலாகியுங்காணார்க்கவனிருளாய்
உண்டானவனுண்ணாமுலையுடையாளொருபாகங்
கொண்டானவன்கொடியேனிடர்தீரப்பெருந்துறையா
னெண்டோளுடையெம்மானெங்களெந்தைபெருந்தகையே.

காஞர்க்கவனிருள்ளாமவன்கண்டாற்பரவெளியா
யாஞகியும்பெண்ஞகியவண்ஞமலையண்ணல்
ஊஞகியுமுண்ஞமுலையுடையாளொருபாகம்
ஆஞகியுமடியார்க்கருளியன்பெருந்தகையே. (எ)

உமையாளொடுமுடஞகியவுலகின்முதலொருவன்
அமையானவனயன்மாலவர்க்கண்ஞமலையண்ணல்
இமையோர்பலரேத்துங்கழலெந்தைபெருந்துறையான்
நமையாளுடைநம்பன்சிவநாதன்பெருந்தகையே. (அ)

நினைவார்மனங்குடியாமவர்நினையார்மனநில்லார்
அனைவோர்பணியரசாமவரண்ஞமலையண்ணல்
மனையாளொடுபதியாமவர்மலையான்மகளெனுமோர்
எனையாளுடைக்கடலாமவரெந்தைபெருந்தகையே. (௯)

உற்ருருடஞருமவனுலகிற்பதியொருவன்
செற்ருர்புரமெரித்தோன்றிருவண்ஞமலையண்ணல்
கற்ருர்மனமுண்ஞமுலைக்கன்னிக்கொருபாகம்
வற்ருதவனடியார்க்கருள்வளரும்பெருந்தகையே. (௧0)

பகலானவனிருளானவன்பரமன்பரமேட்டி
அகலாதவர்க்கருளாமவனண்ஞமலையண்ணல்
சகமாமெனுமுண்ஞமுலைத்தாயிக்கொருபாகம்
அகலாதவனடியார்க்கருளியன்பெருந்தகையே. (௧௧)

ஆனவனடியார்க்கொருபொருளாயெனதுள்ளந்
தேஞனவன்றேவன்றிருவண்ஞமலையண்ணல்
மோஞனவன்மோனத்தருண்முதிருங்கவிமாலை
தேஞய்த்தினமோதச்சிவசாயுட்சியமாமே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாலவாய்த் திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

அட்டமூர்த்தியையாலவாயண்ணலைச்
சிட்டர்தொழுந்திருவம்பலத்தாடியைத்
திட்டமதாகத்தினந்தொறநாடியே
அட்டனையடியேன்மறந்துய்வனோ. (௧)

சித்தரிற்சித்தனுந்திருவாலவாயனைப்
பத்தியாகப்பாடித்தொழுமினோ
நித்தியமாகநினைந்துளமுருகியே
சித்தனைச்சிறியேன்மறந்துய்வனோ. (௨)

மங்கையாளம்மையாமதுரைச்குநாயகி
கொங்கையிலொன்றைக்குறைசெய்துகாட்டிப்
பங்கமில்லாமற்பார்மணஞ்செய்தவ
னங்கணனையநுதினந்தொழுமினே. (௩)

வல்லசித்தனாய்வந்தவன்மதுரையிற்
கல்லெனுமானைக்குக்கரும்பதுகொடுத்த
வெல்லையில்லதோரேகம்பக்கூத்தனைத்
தில்லையிற்சிறியேன்மறந்துய்வனோ. (௪)

விரகதுசுமந்துவிற்றவன்வித்தக
னருசொடுகொன்றையுமணிமதிசூடி
யெருதொன்றிலேறியேகமாய்நின்றவ
னரன்பதமடியேன்மறந்துய்வனோ. (௫)

ஆனையையெய்தவனடியரைக்காப்பவ
னேனத்தின்குட்டிகட்கிரங்கிப்பாறந்தவ

ஞானத்தையகற்றியுள்குவார்க்குள்ளவன்
கோனவன்றன்னைக்கூடித்தொழுமினே. (சு)

நாகத்தையெய்தவன்நங்கையாண்மதுரையிற்
போகத்தைச்செய்தவன்பொருந்திநாடாண்டவ
னேகத்தோடிருந்தவனேர்கச்சிக்கம்பனை
யூகத்தோடனுதினமுள்கித்தொழுமினே. (எ)

ஆண்டியாளொருத்தியாமவளைமணஞ்செய்து
பாண்டிநாடாண்டுபலவித்தைசெய்தவன்
வேண்டினபேர்களைவினைதீர்த்தாட்கொள்பவ
னாண்டவையடியேன்மறந்துய்வனோ. (அ)

மாமணுகிவணிகக்குளர்தைக்குத்
தாமனைசென்றுபோய்த்தாயத்தார்களைக்
காமனர்போலுங்கண்டித்துக்காத்திட்ட
வாமனைவறியேன்மறந்துய்வனோ. (கூ)

ஆலவாயண்ணலையனுதினம்போற்றுமின்
மாலயன்காணுமங்கைபங்காளனைக்
கோலமாயேத்திக்குறுகித்தொழுதிடக்
காலனுமணுகிடான்கடவுளராணையே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருமுதுகுன்றம் திருக்குறுந்தொகை.

:o:

திருச்சிற்றம்பலம்.

அண்ணலாகியவத்தன்முதுகுன்றைக்
கண்ணினீர்பெருகிக்கருதித்தொழுதிட
மண்ணிற்பிறவிநோய்மாண்டுபோகுமே
திண்ணமதாகச்சிவனாணையுண்மையே (க)

பெத்தன்பெரியவன்பெரியம்மையாளுட
னெத்தனிளையவனிளமுலைபங்கனுங்
கத்தன்சேவடிகருதித்தினந்தொறு
நத்திநாமேத்தநமனிடரில்லையே. (உ)

தந்தையுந்தாயுமானபழமலைப்
பொந்தைப்பரவிப்போற்றித்தொழுமின்
வெந்திடக்காமனைவிழித்தவற்பணிமி
னைந்துளமுருகுநம்வினைபோகுமே. (ங)

தில்லையிலாடுவான்முதுகுன்றிற்சேரும்
வல்லவனைத்தினம்வருந்திநாமேத்திக்
கல்மனமுருகிக்கசிந்தடிபரவ
நல்லவழியுண்டுநமனிடரில்லையே. (ச)

அந்தமாயுலகாதியுமாயினன்
பந்தமாகியும்பரம்பொருளாயவன்
முந்திவளர்ந்ததோர்முதுகுன்றத்தண்ணலைச்
சிந்தையிலேத்துவோர்தீவினைதீருமே. (ரு)

மாந்தளிர்சோலைமணிமுத்தஞ்சூழும்
பூந்தளிர்கொன்றைப்புண்ணியன்முதுகுன்றிற்
கூந்தல்பெரியம்மைகொண்டவன்பாதத்தைச்
சூழ்ந்துதொழுபவர்தொல்வினைதீருமே. (சு)

பாடியாடுவீர்பழமலைநாதனைத்
தேடித்தினந்தினஞ்சென்றுதொழுமின்
ஓடியமனமதையொடுக்கவல்லிரேல்
ஆடியபாதமருள்வழிகாட்டுமே. (எ)

அன்னைபெரியம்மையவளுக்கினியவன்
பின்னையவன்பதம்பேணுதார்முப்புரம்

முன்னையெரித்தமுதூருகுன்றத்தண்ணலைப்
புன்னைமலர்கொண்டுபோற்றித்தொழுமினே. (அ)

நவலோகமாகியநாதன்முதுகுன்றைச்
சிவசிவவென்றுநீர்தேம்பித்தொழுமின்
பவமதுநீக்கிப்பாதத்தைச்சூட்டுவோன்
சிவபதநிச்சயஞ்சிவனுணையுண்மையே. (கூ)

அத்தன்முதுகுன்றையனுதினமுள்கிச்
சித்தத்திலைத்துவோர்தீவினைதீரும்
பத்திப்பலதெய்வம்பாராதீர்பாவிகாள்
சத்தியஞ்சத்தியந்தம்பிரானுணையே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## பேரூர் திருக்குறுந்தொகை.

:0:

திருச்சிற்றம்பலம்.

பிச்சன்பிறப்பிலிபேரூரைநாடிப்
பச்சைவல்லிசேர்பட்டீசன்பாதத்திற்
பச்சிலைபலமலர்பரப்பியெந்நாளு
மிச்சையின்மறவாதேத்தித்தொழுமினே. (க)

வெள்ளியங்கிரிதனில்வேதமோதிக்
கொள்ளிக்காடதனிற்கூத்துகந்தாடுவோன்
பிள்ளையையுண்டவன்பேரூரன்பாதத்தை
யுள்ளமுருகியுகந்துதொழுமினே. (உ)

பட்டியப்பனும்பச்சைவல்லியும்
அட்டமூர்த்தியாயனலெரியாடுவோன்

சிட்டன்சேவடிதினமுழுள்கியே
இட்டமதாகவேத்தித்தொழுமினே. (௩)

பேயுடன்காட்டகத்தாடும்பேரொளி
ஆயவன்பாதத்தையனுதினம்பாடக்
காயத்துக்கழிவில்லைகருத்தினுள்ளுருகி
நேயமதாகநித்தலுந்தொழுமினே. (௪)

எமனுலிடியுண்டேங்கிடுமேழைகாள்
பேய்மனதகற்றிப்பேரூரைநாடி
யோமெனுமெழுத்தினுலுள்கவல்லிரே
லேமனிடரில்லையீசனுராணையே. (௫)

பாத்தனுக்கருளியபட்டியெம்மண்ணலைப்
பூத்திடுமலர்கொடுபோற்றித்தொழுமின்
பீத்தத்துருத்தியைப்பேணுமர்கொன்னற
யாத்தியைச்சூடுமெப்பனைத்தொழுமினே. (௬)

காலுக்கைகளுங்கவின்பெறவிருந்து
மாலமுண்டதோரண்ணலின்கோயிலைக்
காலையுமாலையுங்கருதித்தொழாதவர்
காலனுலிடியுண்டெருகிமாள்வரே. (௭)

அண்ணலாலயமில்லாதவூரெல்லாஞ்
சுண்ணஞ்சுடுகாடாஞ்சொல்லும்வேதமே
பெண்ணொடாணுகியபித்தன்பேரூரைத்
திண்ணமதாகத்தேடித்தொழுமினே. (௮)

நிலையிலாக்காயத்தைநிசமென்றுநம்பிக்
கொலைசெய்துதின்றுகொடும்பவமேற்கிறீர்
வலைவீசுமேமனுல்வருந்துன்பமறிகிலீர்
புலதெய்வம்பாராதீர்பரமனைத்தொழுமினே. (௯)

பித்தன்பேரூரைப்பேணித்தொழாதவர்
கத்தியகழுதையாய்க்கடிபலமிருகமாய்
நத்தியநாய்களாய்நமனுக்காளாகுவர்
சித்தன்பதந்தொழார்நிரகாள்வரே (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருமணநல்லூர்த் திருக்குறுந்தொகை.

---

திருச்சிற்றம்பலம்.

திருமணநல்லூர்ச்சிவலோகத்தண்ணலை
யொருமனதாகவுருகிந்தொழுமின்
கருகிப்போநம்வினைகதியதுகூடுந்
திருவருணிச்சயந்திருவடிசேர்மினே. (க)

நண்ணீர்ப்பெருமணநல்லூர்மேவிய
வெண்ணீற்றுமையுடன்விளங்குமண்ணலைக்
கண்ணீர்பெருகிக்கருதித்தொழுதிடத்
தெண்ணீர்மனமதாய்ச்சிவபதமுண்மையே. (உ)

உமையவள்வெண்ணீருடையவள்கணவனை
அமைவீர்நல்லூரண்ணலைக்காதலாய்
நமையாளுநம்பநம்பவென்றேத்த
வெமனுயிர்கொல்லானிடுக்கணுமில்லையே. (ங)

முத்தன்சிவலோகன்முப்பொருட்சோதியை
பத்தியாகப்பாவித்தொழுமின்
சித்தன்சிவலோகன்றிருமணநல்லூரரை
நித்தந்தொழுபவர்நினைத்ததுகூடுமே. (ச)

திருப்புன்கூர்மேவியசிவலோகத்தண்ணலை
விருப்பமதாகவேண்டித்தொழுமி
னுருக்கிநீர்பெருக்கியோதியுள்க
விருப்பனுள்ளத்திருவினையேகுமே. (௫)

அனைத்துயிர்படைத்திடுமெத்தன்சிவலோகன்
நினைப்பவர்மனத்தானீங்காதிருப்பவன்
சினத்தைத்தவிர்த்துத்திருவடிதொழுபவ
ரனைத்துடனிக்கியமருலகாள்வரே. (௬)

அண்டரிறைநந்திடுமெத்தனல்லூரைக்
கண்டுதிருவடிகருதித்தொழுமின்
பண்டைவினையாவும்பறந்துபோகுமென்
றண்டனூர்சொல்லியவருமறைபேசுமே. (௭)

மதியஞ்சூடியமாமணிச்சோதியான்
பதியதாகினான்பருமணநல்லூர்
நிதியதாகியநீற்றுமையண்ணலைக்
கதியதாகக்கருதித்தொழுமினே. (௮)

கங்கைசூடியகாளகண்டனூர்
மங்கைபாகமாய்மருவுநல்லூரி
லங்கம்பொங்கவடியிணைதொழுமின்
செங்கண்வெள்ளேறுடன்திருவடிகூடுமே. (௯)

மண்ணும்மப்புடன்மதிக்கொணுவங்கியும்
விண்ணுங்காலுடன்விரிந்தலகெங்குமா
மண்ணலைநல்லூர்மேவியவப்பனைக்
கண்ணிற்கசிந்துகருதித்தொழுமினே. (௧௦)

அஞ்சுமெட்டுமொருடன்மூன்றுமாய்
நஞ்சுண்டகண்டனைநல்லூரிற்போற்றித்
துஞ்சும்போதெலாந்தொழுதுநீரேத்த
வஞ்சகம்போமுமைவானவர்தொழுவரே. (௧௩)

திருச்சிற்றம்பலம்

---

## புக்கொளியூரவிநாசி திருக்குறுந்தொகை.

——:0:——

திருச்சிற்றம்பலம்.

புக்கொளியூரெனும்புண்ணியவவிநாசி
திக்கெலாநிறைந்தசோர்திருமறைக்காடரைச்
சொக்கரம்பலவனைச்சோதியென்றன்பி
னக்கனைத்தினந்தினநாடித்தொழுமினே. (௧)

அப்பனையன்னையாயவிநாசிமேவிக்
கப்பரையோடுகபாலமேந்தினான்
முப்பொருளாகியமுழுமுதற்சோதியை
யப்பனையடியேன்மறந்துய்வனோ. (௨)

அம்பலத்தாடியவிநாசியுறைபவன்
கம்பமதாகிக்கரியமால்காணொணா
தும்பர்கள்போற்றவுண்விடமுண்ட
நம்பனைநாயினேன்மறந்துய்வனோ. (௩)

அண்டர்கள்போற்றுமவிநாசியப்பரைக்
கண்டுதொழுபவர்கன்மவினைகள்போ
மெண்டிசையெங்குமாமேழுலகாகிய
வண்டனையடியேன்மறந்துய்வனோ. (௪)

அருணைமேவியவவிநாசியப்பரைக்
கருணையம்மன்கண்டெண்ணிக்க
வருணன்வானவர்வணங்குபாதத்
தருணையையடியேன்மறந்துய்வனே. (௫)

அவிநாசிமேவியப்பனையெண்ணித்
தவநாளுஞ்செய்யத்தாபங்கடரு
மவநாள்கள்போக்காதிரந்தகன்சொல்லுவான்
சிவனாரைச்சேவித்தாற்றீவினையில்லையே. (௬)

அண்ணாமலையெனுமவிநாசியப்பனைக்
கண்ணீர்மல்கிக்கருதித்தொழுமி
னெண்ணுமெழுந்தாயெங்குநிறைந்த
வண்ணலையடியேன்மறந்துய்வனே. (௭)

அங்கணானவிநாசியப்பனைத்
திங்கள்சூடியதென்பாண்டியண்ணலை
மங்கைபாகனைமான்மழுவேந்தியைச்
செங்கண்வெள்ளேறியைத்தினந்தினந்தொழுமினே. (௮)

கொல்புலிச்சட்டைக்குழகனைத்தேடி
யல்லும்பகலுமவிநாசியண்ணலைக்
கல்மனமுருகச்சிந்தித்துள்கவல்லிரே
லல்லல்வினைகள்போமரனாணையுண்மையே. (௯)

ஆனையையுரித்ததோரவிநாசியப்பரை
யூனையுருக்கியுளமுள்கவல்லிரே
லீனமற்றிடுமென்றைக்குமழிவில்லை
மோனமுற்றிடும்முதல்வனாராணையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பாண்டிக்கொடுமுடி அஞ்செழுத்துண்மை.

பண்-பழம்-பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

முத்திமுந்தெனப்பற்றிநின்பதம்மோனமாயுனைக்கூடியே
மெத்தமெத்தவுஞ்சித்தம்பொங்கிநின்மெய்யடிகண்டுமேவியே
சித்தர்கடொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
நத்தியேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௧)

இன்பமாயுனையேத்துவாரிகழ்ந்திந்நாயினேனெப்பவு
மன்பிலானிவனென்றுநீயென்னையப்பனேதள்ளனீதியோ
வன்பர்கள்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடிச்
செம்பொனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௨)

ஆதியேசிவசோதியேயெங்களந்தனேயம்மைதலைவனே
பூதியாகியபோதனேசடைப்பூண்டதண்புனற்காவிரிச்
சீதரார்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
நாதனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௩)

அண்ணலேயெங்களாதியேயுன்னையனுதினம்படித்துன்னுவோர்
கண்ணிலேயுனைக்கண்டுகொள்ளுவர்கருதியேமெத்தவுருகினற்
பண்ணவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
நண்ணியேயுனைநான்மறக்கினுஞ் சொல்லுநாநமச்சிவாயவே. (௪)

உண்டநாளுணர்வழியுநாளுயிர்போகுநாளுயர்பாடைமேற்
கண்டநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரித்
தொண்டர்கடொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
கொண்டவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௫)

எந்தையைப்புகழெம்பிரானெந்தைதம்பிரானென்பொன்மாமணி
சிந்தையுந்திவளம்பொழிந்திழிசேவடியதன்வாய்க்கரைப்

பொங்குநையாந்தொழுதேத்துஞ்சீர்க்கரையூரிற்பாண்டிக்கொடுமுடி
நந்தியேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (சு)

கொச்சைமேவியகொற்றவாவுனைக்கோடிசோடிபிரமர்மால்
மெச்சியேமுத்திமேவுவார்சத்திமேலதாம்பதிக்காவிரிப்
பச்சைமாதொருமுதேத்துஞ்சீர்க்கரையூரிற்பாண்டிக்கொடுமுடி
நச்சியேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (எ)

ஆடுவாய்சுடுகாட்டிலேயெங்குமண்டபிண்டமுமொன்றதாய்க்
கூடுவாய்சிவசத்தியோடயன்கூடொணாப்பெருஞ்சோதியே
தேடுமொருமுதேத்துஞ்சீர்க்கரையூரிற்பாண்டிக்கொடுமுடி
நாடனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (அ)

எத்தனேவுனையேத்திநாயினேனென்வினைகளுமேகின
னித்தவண்பொழில்சூழ்ந்தெழில்பெறநின்றகாவிரிக்கோட்டிடைக்
குத்துமென்முலைக்கோதைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
நத்துவாயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (கூ)

செஞ்சடைகொன்றைசூடியேபுரந்தீயெழச்சிலைகோலினாய்
கொஞ்சுமாங்குழலாளைப்பாகமமர்ந்தகாவிரிக்கோட்டிடைக்
குஞ்சுமான்குயில்கூவமாமயிலாடுபாண்டிக்கொடுமுடி
நஞ்சணிகண்டநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (க0)

சண்முகன்றந்தையெம்பிரானெந்தைநம்பிரானெனென்பொன்மாமணி
பண்பெழில்பலகோடிதேவர்கள்பாடிநின்றுபிரிகிலார் [யென்று
மண்பொதுத்தந்தையேத்துஞ்சீர்க்கரையூரிற்பாண்டிக்கொடுமுடி
நண்பனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (கக)

சோடிமாமலர்சூடியைக்கரையூரிற்பாண்டிக்கொடுமுடி
நாடியசிவநாதனைத்தேடிநாயினேன்கண்டுகொண்டென்றுய்ப்

பாடியபாடன்மௌனத்தாட்டோன்றிப்பரமனைப்பணிக்தேத்நியே.
சூடியமாலையாண்டிநாடொறுஞ்சொல்லுவார்க்கில்லைத்துன்பமே(௧௨)

நடக்கிறுமிருக்கும்போதுநல்லறஞ்செய்யும்போது
பிடிக்கண்வந்துற்றபோதுமெத்தொழில்செய்யும்போது
முடித்துமுண்டுசெங்கும்போதுமோம்சிவசிவவென்றுன்னிச்
சடைக்கங்கைசிவாயவென்போர்தாழ்விலார்மேலோர்தாமே. (௧௩)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பிரமாபுரம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பெற்றேன்பல்பிறவிபிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன்
செற்றார்புரமெரித்தாய்திருக்காழியுளெம்பெருமா
னுற்றேனினிப்பிறவியுனையுள்குமோராசையினா
லற்றேன்வந்தடைந்தேனடியேனிடர்தீர்த்தருளே. (௧)

முற்றாப்பிறையணிந்தாய்முதநான்மறைமுக்கணனே.
மற்றார்மாயைகொண்டுமெய்க்குற்றனனெம்பெருமான்
கற்றார்காழிபுளாய்கடைநாயினேனுய்யும்வண்ணம்
மற்றேன்வந்தடைந்தேனடியேனிடர்தீர்த்தருளே. (௨)

என்னேனுன்பதத்தையெண்டோளுடைமுக்கணனே
மன்னார்மாயைகொண்டுமெய்க்குற்றனனெம்பெருமான்
கண்ணாற்பாருமையே கடைநாயினேனுய்யும்வண்ணம்
மண்ணாவந்தடைந்தேனடியேனிடர்தீர்த்தருளே. (௩)

கூற்றைக்கூற்றுதைத்தாய்கொச்சைமெச்சியகொற்றவனே
யேற்றேன்பல்பிறவியெடுத்தேயிறந்தெய்த்தொழிந்தே
னூற்றுவுருவியுள்ளமுனையுள்குமோராசையினா
மாற்றேன்வந்தடைந்தேனடியேனிடர்தீர்த்தருளே. (௪)

வேண்டேன்பல்பிறவிவினைதீர்த்தருளெங்குருவே
மூண்டேன்மாயையிருண்மூடமுற்றனனெம்பெருமான்
றூண்டாமணிவிளக்கேதிருத்தோணியுண்மேயவனே
யீண்டேவந்தடைந்தேனெளியேனிடர்தீர்த்தருளே. (௫)

எண்ணாப்பல்பிறவியெடுத்தேயிறந்தெய்த்தொழிந்தே
னூண்ணாறுடலெடுத்தேன்மயக்குற்றனனெம்பெருமான்
கண்ணேகண்மணியேதிருக்காழியுண்மேயவனே
யண்ணாவந்தடைந்தேனடியேனிடர்தீர்த்தருளே. (௬)

பண்டேபல்பணிசேர்பரங்குன்றச்சிவாயவென்று
மெண்டோண்முக்கணுடையிறைவாவென்றன்றந்தையென்றுங்
கண்டேயுள்ளுருகியுனைக்காணுமோராசையினா
லண்டாவந்தடைந்தேனடியேனிடர்தீர்த்தருளே. (௭)

தேனார்கண்ணிபங்காதிருக்காழியுண்மேயவனே
மானார்மாயைகொண்டுமயக்குற்றனனெம்பெருமான்
றேனேதீன்கரும்பேசிறுநாயினேனுய்யும்வண்ணம்
யானேவந்தடைந்தேனடியேனிடர்தீர்த்தருளே. (அ)

காணார்நான்முகனுங்கரிமாலொடுதேவரெலாம்
வாணாள்போகுதென்னாவந்தநஞ்சமுதுண்டவனே
பேணேன்பிறதெய்வத்தைப்பிரமாபுரத்தெம்பெருமான்
ஆணாய்வந்தடைந்தேனடியேனிடர்தீர்த்தருளே. (௯)

எந்தாய்சம்பந்தனாமவனென்னுயிர்க்கண்ணுதலாய்
வந்தான்காழிநகர்வளர்ஞானப்பாலுண்டவுடன்
வெந்தார்சமணரெல்லாம்விதிவெங்குருவெம்பெருமா
னெந்தாய்வந்தடைந்தேனெளியேனிடர்தீர்த்தருளே. (௧௦)

அல்லார் மாயைவலையடைந் துற்றபேரன் புறுமி
யெல்லாம்வல்லவனையிப்பாடல்கொண்டேத்தவல்லார்
செல்லார் நிநெறியிற்சிவன்சேவடிசேர்ந்தொன்றாய்ப்
பல்லோர்க்கறியவொண்ணுப்பரலோகத்திருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## கோயில்-பண்-நட்டராகம்

திருச்சிற்றம்பலம்.

பூவார்கொன்றைமதிபொன்னூர்சடைப்புண்ணியனே
ஓவாப்பிறப்பறுத்தேயிறப்பொளித்தருளுத்தமனே
தேவாதில்லைநகர்ச்சிற்றம்பலத்தெம்பெருமா
னுவாவென்றழைத்தேயடியேனையாட்கொண்டருளே. (க)

அருவாயுருவமர்ந்தாயடியார்க்கருடாயகனே
திருவார்நான்மறைசேர்சிற்றம்பலத்தெம்பெருமான்
கருவாயுடலெடுத்தேனுனைக்காண்பதோராசையினாற்
குருவாயெனைக்கலந்தேகொடியேனையாட்கொண்டருளே. (உ)

இருளேயெனைவிழுங்கிப்புனையேத்தவழிகாணேன்
மருளார்மாயைமூடிமயக்குற்றனனெம்பெருமான்
பொருளேபுலியூராவுனைப்புணர்வதோராசையினு
லருளேவந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (ங)

போற்றேனுன்பதத்தைப்புலப்பொய்யராமைவரெனும்
மாற்றார் துன்பமெய்திமயக்குற்றனனெம்பெருமான்
தேற்றாய்தில்லையுளாயுனைச்சேர்வதோராசையினு
லாற்றேன்வந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (ச)

அடியேற்குள்ளாகியங்கலிங்கத்துளொன்றுமி
முடியாப்பிறப்பறுப்பாய்முதுகாடுறைமுக்கணனே

கொடியேன்வந்தடைந்தேனுனைக்கொள்வதோராசையினு
லடிகேளம்பலத்தாயடியேனையாட்கொண்டருளே. (ரு)

கொண்டேன்பல்பிறவிப்புலன்கொடும்பழிக்கஞ்சுகின்றே
னெண்டோளம்பலத்தாயறிவெந்தாயிந்தமொழி
கண்டேபுலனறுப்பாயுனைக்காண்பதோராசையினு
லண்டாவந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (சு)

முத்தாமுதற்பொருளேதில்லைமூதூரெம்பெருமான்
செத்தேன்வாக்கிழந்தேன்சிறுநாயினேனுய்யும்வண்ணஞ்
சித்தாசின்மயனேயுனைச்சேர்வதோராசையினு
லத்தாவந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (எ)

அலரோனச்சுதனுமாகியடிமுடிகாணவொண்ணுய்
மலையான்மகள்காணமணிமன்றணிநின்ருடுகின்ரு
யலையேன்பிறவிநோயாலுனையடையுமோராசையினுற்
றலைவாவந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (அ)

செந்தமிழ்வல்லவனுந்திருஞானசம்பந்தனெந்தன்
பந்தந்தீர்ந்திடவேபரசைவமேமெய்யதென்ருன்
சிந்தைநைந்துருகியுனைச்சேர்வதோராசையினு
லெந்தாயம்பலத்தாவெளியேனையாட்கொண்டருளே. (கூ)

காரார்குன்றெனவேகடற்கல்லின்மேனின்றவெந்தை
சீராரம்பலமாந்திருச்சைவமேமெய்யதென்ரு
ஞரெம்பெருமானுனையடையுமோராசையினுற்
சீராய்வந்தடைந்தேன்சிறியேனையாட்கொண்டருளே. (க0)

சேலார்கண்ணிபங்காசிற்றம்பலத்தெம்பெருமான்
மேலாநாவலூரன்சைவசமயமேமெய்யதென்ருன்
காலாற்கூற்றுதைத்தாயுனைக்காண்பதோராசையினுற்
சேலாய்வந்தடைந்தேன்சிறியேனையாட்கொண்டருளே. (கக)

வேதாதில்லையுளாய்திருவாதவூர்வேந்தனெந்தை
வாதாய்ப்புத்தர்சிந்தவளர்சைவமேமெய்யதென்றான்
போதாகாயடியேனுனைப்புணர்வதோராசையினாற்
றாதாவந்தடைந்தேன்றமியேனையாட்கொண்டருளே. (கஉ)

நால்வர்கள்பாதமொன்றாய்க்கொண்டுநாயேனுள்ளிருந்து
மூலன்முதற்பொருளாம்முதிர்மோனர்துதித்தருட்பா
காலன்கட்டறுக்குமிவைகருதினாளேத்தவல்லார்
நாலாம்பதம்பெறுவர்சிவநாதனுராணையிதே. (கங)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழுக்குன்றம் திருக்குறுந்தொகை.

### குருதரிசனம்.

திருச்சிற்றம்பலம்.

அட்டமூர்த்தியாயண்டநிறைந்தவ
னெட்டுமஞ்சுமாயேழுமிரண்டுமாய்
சட்டமாடியாநங்கையுந்தானுமாய்ச்
சிட்டனைக்கண்டனுன்றிருக்கழுக்குன்றிலே. (க)

பத்துநூறுடனெட்டுமூன்றுமாய்ச்
சித்தன்பத்துடன்றெண்டுநாலுடா
யெத்தனெண்டிசையெங்குநிறைந்தநங்
கத்தனைக்கண்டனுன்றண்கழுக்குன்றிலே. (உ)

பத்திசெய்திடப்பாவத்தைத்தீர்ப்பவன்
நித்தநினைப்பவர்நினைவுள்ளிருப்பவ
னத்தனம்மையாடாடியுகந்ததோர்
சித்தனைக்கண்டனுன்றிருக்கழுக்குன்றிலே. (ங)

நோக்கிநினைப்பவர்நோய்களறுப்பவ
னாக்கியபாதத்தைச்சூட்டியாட்கொள்பவ
னூக்கியளிப்பவனப்பாலாய்நின் றவன்
றூக்கிடக்கண்டனூன் றண்கழுக்குன்றிலே. (ச)

நின்றுதினந்தொறுநினைந்துள்கவல்லிரேற்
கொன்றுநின்றதோர்கொடும்பவந்தீர்ந்திடு
மென்றுமென்னுளேயேகமாய்நின்றதைச்
சென்றுகண்டனூன்றிருக்கழுக்குன்றிலே. (ரு)

மூணுபத்துடன்மூவிரண்டாறுமாய்
மூணுகோட்டையுமுனிந்துசிரித்தவன்
கோணைப்பிறைகங்கைகொங்கைகுலிங்கிடத்
தாணுவைக்கண்டனூன் றண்கழுக்குன்றிலே. (சு)

அஞ்சுமாறுமாவெட்டுடன்ரெண்டுமாய்
நஞ்சுண்டகண்டத்தைநங்கையாள்பற்றிக்
கொஞ்சிக்குலாவிநின்றாடுங்கூத்தனூர்
செஞ்சடைகண்டனூன்றிருக்கழுக்குன்றிலே. (எ)

மூவிரண்டாறுமாய்மூன்றுடனென்றதாய்க்
காவியங்கண்ணியாள்கலந்துநின்றதா
யோவியர்க்கெழுதொணாவுரையற்றுநின்றதோர்
தேவனைக்கண்டனூன்றிருக்கழுக்குன்றிலே. (அ)

ஒருமுதற்பொருளதாயுலகெலாநின்றவ
னொருபதோடெண்பதாயொருமூன்றுமூன்றதாய்க்
குருவடிவாகியேகூத்தாடிநின்றதோர்
திருவுருக்கண்டனூன்றிருக்கழுக்குன்றிலே. (கூ)

ஆர்த்தபிறவிநோயறுத்திடுமெட்டனைக்
கார்த்திகைக்குகர்த்தங்கர்தனூர்தர்மையைய

எத்தியிடையறுநிறைந்சவல்விரேற்
றீர்த்திடேம்வினைதிருக்கழுக்குன்றிலே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# திருக்கழுக்குன்றம்.

## குருதரிசனம்.

### திருவாசகத்திசை.

---

திருச்சிற்றம்பலம்.

சித்தனேசிவலோகனேசிட்டர்
போற்றுகின்றசெழுஞ்சுடர்
முத்தனேமூவர்முதல்வனேயெங்கள்
முழுமுதற்பெருஞ்சோதியே
நத்திநாயினுங்கடையனாகிய
நாயினேனையும்பொருளதாய்க்
கத்தனாகியகடவுளேவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே. (௧)

அட்டனாகியவம்மையேயெங்க
ளாதியேபெருஞ்சோதியே
விட்டொருனைப்பிரிவனோவெந்தை
பாதமேவினையேன்மன
மெட்டினேனம்மைகிருபையாற்கண்
டேகமாகியமூர்த்தனே
கட்டனேனையுமாட்கொள்வான்வந்து
காட்டினாய்கழுக்குன்றிலே. (௨)

அல்லமப்பொருளாகியவெங்க
ளாதியேயம்மைதலைவனே
யெல்லையில்லதோர்வினைக்கடல்கிடந்
தழுந்தினேனைக்கண்ணோக்கியே
தொல்லையைக்களைந்தென்னையாண்டுநீ
தொண்டனாக்கியாட்கொண்டவா
கல்லனேனையும்பொருளதாயெண்ணிக்
காட்டினாய்கழுக்குன்றிலே. (௩)

அண்ணலேயெங்களாதியேயம்மை
யருமறைமுடியினின்றிடுங்
கண்ணனேகாளகண்டனேதொண்டர்
கருத்திலேயிருந்தாடுவா
யெண்ணுமாயெழுத்தாகியேயெங்குஞ்
சோதியாயதனையறியொணாக்
கண்ணிலேனையும்பொருளதாயெண்ணிக்
காட்டினாய்கழுக்குன்றிலே. (௪)

ஆதியாகியவண்டபிண்டமு
மங்கலிங்கத்தின்பீடமாய்ச்
சோதியாகியதுணைவனேதொண்டர்
தொண்டனேதொண்டர்கருதிய
நீதியாகியபோதநந்திடு
நித்தனேசுத்தபூரணா
காதிலோதிடும்பொருளதாய்வந்து
காட்டினாய்கழுக்குன்றிலே. (௫)

அருத்தனாகியவண்ணலேயெங்க
ளாலவாயினின்மேவிய

திருத்தனேசிவலோகனேதொண்டர்
சிந்தைவைத்தசிகாமணி
நிருத்தனேயம்மைநேசனேநித்த
நினைப்பவர்சித்தந்தெளியவே
சருத்திலேயிருந்தாட்கொள்வான்வந்து
காட்டினுய்சமுக்குன்றிலே. (௬)

தானுவாகியதற்பரப்பொருள்
தம்பிரான்சிவலிங்கமாய்க்
கோணியபிறைகங்கைசூடிய
கொங்கைதங்கியமங்கையு
மாணுமாகியவண்டபிண்டமா
யங்கொருத்திமகிழ்வதாய்க்
காணவேயெனையாட்கொள்வான்வந்து
காட்டினுய்சமுக்குன்றிலே. (௭)

திருச்சிற்றம்பலம்.

---

# திருக்குற்றாலம் திருக்குறுந்தொகை.

---

திருச்சிற்றம்பலம்.

பண்டுமின்றுமாயென்றுமுள்ளவன்
கொண்டெங்கொடேத்தலன் குற்றாலத்தண்ணலை
விண்டும்விரிஞ்சனும்விணாந்துகாண்கிலா
வண்டனைத்தினமடிபணிந்துய்மினே, (௧)

உற்றாரும்பொய்பொய்யுடலுயிர்பொய்பொய்
மற்றாரும்பொய்பொய்மனையவள்பொய்பொய்
செற்றார்புரமூன்றுஞ்செற்றவன்மெய்மெய்
குற்றாலத்தண்ணலைக்குறுகித்தொழுமினே. (௨)

தந்தைதாய்பொய்பொய்சனங்களும்பொய்பொய்
மைந்தரும்பொய்பொய் மாநிலம்பொய்பொய்
யிந்தமெய்பொய்பொய் யீசனார்மெய்மெய்
யெந்தையின்குற்றாலத்திணையடிதொழுமினே. (௩)

என்றுமுள்ளவனெல்லார்க்குந்தந்தையை
மன்றுளாடியமங்கைமணாளனைக்
குன்றின்மேவியகுற்றாலத்தண்ணலைச்
சென்றுதினந்தொழத்தீவினைதீருமே. (௪)

ஊட்டிவளர்ப்பவனுறங்கவைப்பவன்
ஓட்டிவைப்பவனுள்ளங்கரைப்பவன்
கூட்டிவைப்பவன்குற்றாலத்தண்ணலை
நாட்டித்தொழுதிடநம்வினையோயுமே. (௫)

கண்டங்கறுத்தவன்கப்பரையேந்தியுந்
தண்டுசூலமுந்தாங்கியகையினன்
குண்டனைக்காய்ந்திடுங்குற்றாலத்தண்ணலைக்
கண்டடிபணியநங்கன்மங்கடொலையுமே. (௬)

பூத்திடுமலருமாய்ப்பூவுக்குள்வாசமாய்க்
கோத்திரங்குலமானகுற்றாலத்தண்ணலைக்
காத்துத்தினந்தொறுங்கண்டடிபணிந்துள்கி
யேத்தித்தொழுபவர்க்கெமபயமில்லையே, (௭)

அஞ்செழுத்தாண்மையாயமர்ந்தவண்ணலைத்
தஞ்சமென்றடிதொழுந்தாடந்துகாப்பவன்
வஞ்சகமற்றடிவாழ்த்திவணங்கிடக்
கொஞ்சமுங்குறைவில்லைகுற்றாலந்தொழுமினே. (அ)

குட்டநோய்தீர்த்திடுங்குற்றாலத்தண்ணலை
யட்டியில்லாமனிராறுதினந்தொழுதிடக்
குட்டநோய்தீர்ந்திடுங்குறைவில்லையெந்நாளு
நட்டமாடுநாதனைத்தொழுமினே. (௯)

அனைத்துயிர்படைத்தவனம்பலத்தாடிய
குனித்தபுருவத்தன்குற்றாலத்தண்ணலை
மனத்தினிலேத்திமாதேவன்பாதத்தை
நினைத்துன்னித்தொழுதிடநீங்குநம்வினைகளே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## பாவநாசக்குறுந்தொகை.

---

திருச்சிற்றம்பலம்.

முத்தன்முழுமுதன்முப்புரமெரித்தவன்
சித்தன்சேவடிசித்தத்திலேத்தி
நித்தன்னிமலனைநினைந்துள்ளமுருகிப்
பத்தியாய்த்தொழுதிடப்பாவங்கடீருமே. (௧)

எல்லாம்படைத்தவனேகமாய்நின்றவன்
கல்லாமற்கற்றவன்காட்டெரியாடுவோன்

வல்லான்மலைமங்கைமன்னனென்றேத்த
வெல்லாவினைகளுமேகித்துலையுமே. (௨)

நங்கையுமையுடனுடெலாமானவன்
கங்கையைச்சூடியுங்கையின்மானேந்தியும்
பொங்கரவணிந்தபுண்ணியன்பாதத்தை
அங்கம்பொங்கநம்மருவினைமாயுமே. (௩)

மான்மறிக்கையினன்மங்கைபங்கனும்
பான்மதிப்பண்டம்பரம்பொருட்சோதியைத்
தேன்மழைபொழியுந்திருவடியேத்த
ஊனமகற்றநம்முள்வினையோயுமே. (௪)

தீவினைமூண்டிடுஞ்சிறுதெய்வமேத்தாதி
ராவினன்குடியினாரப்பன்பாதத்தைத்
தாவித்தினந்தொழச்சாகாதவாழ்வுண்டு
பாவங்கள்போய்விடும்பரமனாணையே. (௫)

அன்னையுமப்பனுமாகியபாதத்தை
யென்னுளேகண்டோனெங்குநிறைந்தன
பின்னையோர்தெய்வத்தைப்பேணுமோயென்னுள
மன்னவனைத்தொழவல்லல்களோயுமே. (௬)

சித்தந்தெளிந்திடச்சிவன்பதமேத்துவீர்
பித்தந்தெளிந்திடப்பெருமருந்தண்ணலைப்
புந்தியுஞ்சித்தமும்பொருந்தப்பணிந்துள்கி
நித்தந்தொழுதிடநம்வினைநீங்குமே. (௭)

சிறுதெய்வமேத்தாதீர்தீவினைமூண்டிடு
மறிவினின்விளங்கின்றவப்பன்பாதத்தை
யுறுதியிற்போற்றநம்மூழ்வினைநீங்கிடுஞ்
சிறுதெய்வம்பொய்பொய்சிவனாணையுண்மையே. (௮)

சங்கரன்கங்காளன்சாம்பசிவப்பொருள்
எங்குநிறைந்தவனெல்லையில்லாதவன்
கங்கைசூடினன்காட்டெரியாடுவன்
எங்குமீசனென்றேதவர்க்கில்லையே. (க)

சிந்தைதெளிந்திடச்சினந்தினமேத்தி
யர்தாமாகியமர்ந்திடுமேவுனத்திற்
றெருந்தங்களற்றிடத்தோன்றருட்பாவைச்
சிந்தித்துப்படிப்பவர்தீவினைதீருமே. (௰)

திருச் சிற்றம்பலம்.

---

## தனித்திருக்குறுந்தொகை.

---

திருச்சிற்றம்பலம்.

தன்னந்தனிமுதற்றற்பரஞ்சோதியைத்
தன்னுளேகண்டிடத்தத்துவப்பொய்யதா
யன்னையுமப்பனுமாகியங்கனே
என்னுளேயொன்றதாயெங்குநிறைந்ததே. (க)

சொல்லுமோர்சொல்லைசுற்றிப்பிடித்துக்
கல்மனதுருகிக்கருதித்தொழுதல்கி
எல்லையற்றதோரெந்தையிணையடி
தில்லையிற்கண்டுதெருசிக்கமுந்தியே. (உ)

எங்குநிறைந்திடுமேசபாதத்தைக்
கங்கையுக்காசியுங்கண்டதீர்த்தத்திற்
பங்கமில்லாமனும்பலதரமூழ்கியும்
அங்கணனைக்கண்டறிதற்கருமையே. (ங)

கட்டுக்கடங்காக்காளகண்டனைச்
சுட்டிக்காட்டிச்சொல்லொணுச்சோதியை
யெட்டுத்திக்குமாயெங்குநிறைந்ததைக்
கட்டிக்கசிந்துசருதித்தொழுமினே. (ச)

பட்டமன்னரும்பாருளோர்போற்றவு
நட்டமாடியுநங்கையாள்காணவும்
பிட்டுக்கலைந்துபிதற்றியும்பித்தனை
இட்டமதாகவேத்தித்தொழுமினே. (ரு)

வேடுவனுகிவேண்டுருக்கொண்டவன்
நாடுநகர்விட்டுநங்கையுந்தானுமா
யேடணையுள்ளார்போலேனத்தையொட்டியே
வூடியபார்த்தனையுளங்கவர்ந்தானே. (௬)

எட்டுக்கடங்காவெந்தையின்பாதத்தைச்
சூட்டித்தொழுதிடத்தொண்டர்க்குத்தொண்டனும்
பாட்டியும்பாட்டனும்பலவிதத்தோற்றத்தை
நாட்டிநைந்திடநம்வினையோயுமே. (௭)

சூத்திரதாரியாய்த்தூக்கியபாதத்தை
நேத்திரமுடினுனின்றதைக்கண்டபின்
சாத்திரக்கூட்டமுஞ்சருவநூல்களு
மாத்திினில்வைத்தநேத்திரமானதே. (அ)

ஒட்டனுமாகியொருமங்கைபிட்டுக்காய்த்
திட்டமதாகத்தென்னவன்காணும்
பட்டமங்கையுந்தானுமோர்பாகமாய்ச்
சுட்டிக்காட்டொணுச்சோதியைத்தொழுமினே. (௯)

திரையற்றசிந்தையிற்றெளிந்துளநோக்கக்
கறையற்றுநின்றவன்காட்டெரியாவோன்

வரையற்றமூர்த்தியைவணங்கிநான்போற்ற
வுரையற்றசோதியாயுள்ளங்குளிர்ந்ததே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## கோயில்திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

கடகரிமுகவனென்றுங்கடம்பணிகந்தனென்று
நடம்புரிபரமர்பாதநாடொறும்வணங்கியேத்தித்
திடம்பெறும்பெரியோர்போற்றுந்தில்லைச்சிற்றம்பலத்தே
யடிமுடியயன்மாறேடவனலெரியாமோறே. (௧)

நம்பியேநாள்கடோறுநாதனேநாதாவென்றுஞ்
செம்பொனேமணியேயென்றுந்தினந்தினமுருகுவார்க்குப்
பைம்பொழிலாரூர்மேவிப்பரவுசிற்றம்பலத்தே
யம்பரப்பொருளாய்நின்றேயனலெரியாமோறே. (௨)

நாறுமாமலருங்கொண்டுநாடொறுமுருகுவார்க்கு
ஆறுமாமுகமுங்காட்டியல்லலையகலநோக்கிச்
சீறுவாளரவுசூடிச்சிறந்தசிற்றம்பலத்தே
கூறுமூவிலைவேலேந்திக்கூத்துகந்தாமோறே. (௩)

முத்தனேமுதல்வாவென்றுமுழுமுதல்வேதமோதிப்
பித்தனென்றேத்துவார்க்குப்பெரும்பற்றப்புலியூர்நின்று
கத்தனுய்த்தோன்றிவந்துகனகவம்பலத்துளாடுஞ்
சித்தனார்நடனங்காணச்சிறியனேன்வந்தவாறே. (௪)

மதியினாலிருளைநீக்கிமனத்தினுள்விளக்கொன்றேந்திப்
பதிபினைக்கண்டுநித்தம்பரவிநின்றேத்துவார்க்கு

நீதியுடன்கதியுங்காட்டிநிறைந்தசிற்றம்பலத்தே
நீதமுநின்னுடல்காணநினைந்துநான்வந்தவாறே. (௫)

புத்தியைத்திகைப்பியாதேபுலையனேனடிமைசெய்ய
வத்தநீயருளிச்செய்யாயாதியேயாதிமூர்த்தி
சித்தர்கள்பரவியேத்துந்தில்லைச்சிற்றம்பலத்தே
பத்தனுன்னுடல்காண்பான்பரமநான்வந்தவாறே. (௬)

ஆட்டுவாயண்டமெல்லாமனைத்துயிர்க்குள்ளேநின்று
கூட்டுவாய்குறுசவைப்பாய்குருவுருவாகிவந்து
நாட்டுவாயடியாருள்ளேநவின்றசிற்றம்பலத்தே
தேட்டநின்னுடல்காண்பான்சிறியனேன்வந்தவாறே. (௭)

பத்தியாய்ப்பரவுகில்லேன்பணிகளோசெய்யமாட்டேன்
முத்தியின்வழியுங்காணேன்மூடனுனலைந்துபோனேன்
சித்தர்கள்தேவர்போற்றுந்தில்லைச்சிற்றம்பலத்தே
நித்தநின்னுடல்காணநினைந்துநான்வந்தவாறே. (௮)

நெஞ்சினினினையமாட்டேனிமலனேநின்றன்பாதம்
வஞ்சகரவர்செய்யும்வாதனைக்கலந்துபோனேன்
பஞ்சணிவிரலாளோடுபரவுசிற்றம்பலத்தே
யஞ்சியுன்னுடல்காண்பானடியனேன்வந்தவாறே. (௯)

ஆதியேயாதிமூர்த்தியரியயனளந்துகாணுச்
சோதியேதொண்டர்போற்றுந்துணைவனேதூரியவாழ்வே
பாதியோடுமையாள்காணப்பரவுசிற்றம்பலத்தே
நீதியாயாடல்காணநினைந்துநான்வந்தவாறே. (௧௦)

பொய்த்தையாமுடலைப்பேணிப்புலையராமைவராலே
மெத்தவும்மெலிந்துபோனேன்மெய்யனேநின்றன்பாதம்
பத்தியாய்வந்தடைந்தேன்பரவுசிற்றம்பலத்தே
சத்தியாமுமையாள்காணத்தணலெரியாடுமாறே. (௧௧)

மனத்திறலிருளோரிக்கமெறியினால்வெறும்பாழாக்கித்
தனக்குளேவிளக்கொன்றேத்தித்தம்பிரான்றானேதானாய்
மனத்திறனின்றசோதிமல்குசிற்றம்பலத்தே
தனித்துநின்றாடல்காண்பான்றமியனேன்வந்தவாறே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

## கோயில்திரு நேரிசை.

:o:

திருச்சிற்றம்பலம்.

சிரமதிற்கங்கைசூடிச்சிறுநிலாவெறிக்குஞ்சென்னிக்
கரமதிற்கபாலமேந்திக்கடைதொறும்பலிகளேற்று
அரவொடுபுலியுமேத்தவழகுசிற்றம்பலத்தே
பரவியுன்றாடல்காண்பான்பரமநான்வந்தவாறே. (க)

வேதமோர்நான்குமாகிவெளிநிலாவெறிக்குஞ்சென்னி
யோதியேயடியாருள்ளேயொருமொழியதனைச்சொல்லிப்
போதமாயிருந்துசாட்டிப்புகழ்ந்தசிற்றம்பலத்தே
யாதியோடகண்டமாகியனலெரியாடுமாறே. (உ)

எண்டிசையண்டகோடியிளநிலாவெறிக்குஞ்சென்னி
தொண்டர்கள்பரவிவாழ்ந்தத்தொல்வினையகலநோக்கி
வண்டமர்குழலாள்காணமகிழ்ந்தசிற்றம்பலத்தே
யண்டமாமுனிவர்போற்றவனலெரியாடுமாறே. (௩)

எட்டெனிரண்டுமோகியிளநிலாவெறிக்குஞ்சென்னி
நட்டுவணங்கிகொட்டநாரதனயன்மால்போற்றச்
சிட்டர்கடினமும்வாழ்த்தச்சிறந்தசிற்றம்பலத்தே
யட்டமாமூர்த்தியாகியனலெரியாடுமாறே. (௪)

அந்தரமாகிநின்றேயருநிலாவெறிக்குஞ்சென்னி
யந்தணர்பலருங்கூடியருமறைதினமுமோதி
மந்திரவடிவாய்நின்றுமல்குசிற்றம்பலத்தே
பந்தணைவிரலாளோடுபரமனீயாடுமாறே. (௫)

அண்டமாமுனிவர்போற்றவருநிலாவெறிக்குஞ்சென்னி
தொண்டர்கடினமும்வாழ்த்தித்தொழுதழுதுருகியேத்தப்
பண்டுசேர்மலைமேவிப்பரவுசிற்றம்பலத்தே
கண்டடியார்கள்சேரக்கனலெரியாடுமாறே. (௬)

மூலனேமூலநாதாமுகிழ்நிலாவெறிச்குஞ்சென்னி
யாலமாம்விடத்தையுண்டேயண்டத்துக்கப்பானின்று
மாலுமோர்பாகமாகமல்குசிற்றம்பலத்தே
சாலவேமானேர்நோக்கித்தணலெரியாடுமாறே. (௭)

முப்பதோடாறுமாகிமுகிழ்நிலாவெறிக்குஞ்சென்னி
யப்பணியாரூர்மேவியண்டங்கள்யாவுமாகிச்
செப்பியேமறைகளோதிச்சிறந்தசிற்றம்பலத்தே
யப்பநின்னுடல்காண்பானடியனேன்வந்தவாறே. (௮)

அஞ்சுடனாறுமாகியருநிலாவெறிக்குஞ்சென்னி
நஞ்சணிகண்டத்தோடுநான்மறைப்பொருளாய்நின்று
செஞ்சடைச்சோலைத்தில்லைத்திகழ்ந்தசிற்றம்பலத்தே
பஞ்சணிவிரலாள்காணப்பரமநீயாடுமாறே. (௯)

ஈசனெவ்வுலகுமாகியிளநிலாவெறிக்குஞ்சென்னி
வாசமாமலருங்கொண்டுவணங்கியேயுருகுவார்க்கு
நேசமாய்நினைவுள்ளாகிநிறைந்தசிற்றம்பலத்தே
கோசங்களகலநோக்கிக்கூத்துகந்தாடுமாறே. (௧௦)

மாலுநான்முகனுங்கூடிமதிக்கொணாவடிவமாகிச்
சாலவேயண்டமெல்லாநதணலெரியுருவாய்நின்று
சீலமாய்மறைகளோதுஞ்சிறந்தசிற்றம்பலத்தே
பாலனுன்னுடல்காண்பான்பரமநான்வந்தவாறே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாரூர் திருநேரிசை.

---

திருச்சிற்றம்பலம்.

பூதமோரைந்துமாகிப்பொறிபுலனுருவாய்த்தோன்றி
மாதரார்வடிவமாயமங்கையர்கொங்கைநோக்கி
வேதனைக்குழியிற்றள்ளும்வேடராமைவராலே
யாதியேயாரூர்மேவுமப்பனேயஞ்சினேனே. (௧)

மனமெனும்பேயினாலேமதிதனைமாயைமூடிச்
சினமெனுந்துன்பக்கோலாற்றீவினைக்கடலின்மூழ்கி
யெனதெனுமுடலைப்பேணியிருவினைநரகிலாழ்ந்தேன்
அனைவரும்போற்றுமாரூரப்பனேயஞ்சினேனே. (௨)

அறிவெனுஞ்சோதிதன்னையைவரான்மறைக்கப்பட்டுக்
குறியிலாக்குருடர்போலக்குழியினிற்பிறந்திறந்து
சுருதியின்வழிகாணாமற்றூண்டியின்மீன்போனொந்தே
னறிவினில்விளையுமாரூரப்பனேயஞ்சினேனே. (௩)

செப்புமாமுலையுங்காட்டுஞ்சிற்றிடைமாதர்வாழ்வில்
அப்பெனுங்குளத்தில்வாழுமையிருகராவைமாட்டித்
தப்பியேபிழைப்பமென்றாற்றமியனேன்வழியுங்காணே
னப்பனேயாரூர்மேவுமண்ணலேயஞ்சினேனே. (௪)

கோடியோகோடிகோடியுசமதாய்க்குழியிலாழ்ந்து
வாடியேவாடிவாடிவல்வினைத்தீயின்மாண்டு
வோடியேயோடியோடியுழ்நரகழுந்தமாட்டேன்
ஆடியயாரூர்மேவுமப்பனேயஞ்சினேனே. (ரு)

ஆனையாமுதலாம்யோனிப்பதுவுடனெறும்பீறாய
வூனமாம்யோனிதோறமுட்டலெடுத்துழன்றநாரு
நானெனுமகந்தைமூடிநாயினேன்வாழமாட்டேன்
ஆனையுரித்தவாரூரப்பனேயஞ்சினேனே. (சு)

புல்லுமாய்ப்பூடுமாகிப்பூசுரர்மனிதராகிக்
கல்லுமாய்க்கணங்களாகிக்கண்டதோர்மிருகமாகி
யெல்லையில்லாதநோயாலெளியனேன்வாழமாட்டேன்
அல்லலைக்களையுமாரூரப்பனேயஞ்சினேனே. (எ)

மருந்துமாய்ப்பிணிகடீர்க்குமாதவாவுந்தன்பாதம்
வருந்தியேவந்தடைந்தேன்வாதனைபொறுக்கமாட்டேன்
திருந்தநீயென்னைக்காப்பாய்திருவண்ணமலையுளானே
யருந்தவர்போற்றுமாரூரப்பனேயஞ்சினேனே. (அ)

முத்தர்கடினமும்போற்றமுடிவிலாமோனவாழ்வே
மெத்தவுமெலிந்துபோனேன்மெய்யனேபிறவிநோயாற்
செத்துநான்பிறவாவண்ணந்திருவடிதந்துகாப்பா
யத்தனேயாரூர்மேவுமண்ணலேயஞ்சினேனே. (கூ)

கண்ணினுண்மணியுமாகிக்காரணகுருவாய்த்தோன்றி
யெண்ணுமாயெழுத்துமாகியென்னுளேயறிவாய்நின்று
பெண்ணுமாயாணுமாகிப்பேதங்கள்பலவுமான
யண்ணலேயாரூர்மேவுமப்பனேயஞ்சினேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர் திருநேரிசை.

---:o:---

திருச்சிற்றம்பலம்.

கொலைகளோகோடிசெய்துகொன்றுநான்தின்று
முலையெனுந்தோலைநாடிமூழ்கியேகுழியில்வீழ்ந்து [டே
தொலையொணாப்பிறவிநோயாற்றுண்டனேன்வாழமாட்
னலைமனதடக்குமாரூரப்பனேயஞ்சினேனே. (க)

மாதர்கள்வலையிற்பட்டு மாயையாமிருளான்மூடித்
தூதர்களைவர்வந்துதுன்பக்கோலதனைத்தந்து
வேதனைக்குழியில்வீழ்ந்துவினையினுன்மாண்டுமொண்டு
ஆகியேயாரூர்மேவுமப்பனேயஞ்சினேனே. (உ)

உண்பதேபெரிதென்றெண்ணியொருபொருளிலாதவாழ்
நம்பியேநரகிலாழ்ந்துநாயினேன்வாழமாட்டேன் [வை
தம்பியேவாடாவென்றுதந்தைநீயழையாவிட்டா
லம்பிகைநின்றவாரூரப்பனேயஞ்சினேனே. (ங)

பரவுவார்தங்கட்கெல்லாம்பரகதிகாட்டுந்தேவே
மருவியேயுமையாள்காணமயானத்திலாடிநின்று
உருகுவார்தங்கட்குள்ளேயூற்றெனவூறுந்தேனு
யரவணியாரூர்மேவுமப்பனேயஞ்சினேனே. (ச)

இருபதும்பத்துமாறுமிலங்கியவீடுதன்னிற்
பெருகுபேராசைகொண்டுபெருநரகழுந்தமாட்டேன்
குருவையேகண்டுபோற்றிக்குண்டலிவழியைக்காணே
னருமலர்விளையுமாரூரப்பனேயஞ்சினேனே. (ரு)

ஊத்தையாமுதிரக்குப்பையொருபொருளிலாதமாயம்
மூத்திரக்குழியால்வந்தேமூத்திரக்குழியைநாடிச்

சோத்தினன்மேய்ந்தகூரைதுயரமேபலவாய்நொந்தே
னாத்தியைச்சூடுமாரூரப்பனேயஞ்சினேனே. (சு)

பெருத்ததோருடலைப்பேணிப்பெருநரகமுந்தமாட்டேன்
வருத்தமோவறிந்தாயில்லைவாவென்றுசொன்னாயில்லை
கருத்ததோர்காளகண்டாகலங்கியேபுலம்பினாடி
யருத்தனேயாரூர்மேவுமப்பனேயஞ்சினேனே. (எ)

நாலைந்துமாறும்பத்துநாட்டியவீடுதன்னிற்
சாலவேயைவர்வந்துசங்கடம்பலவுஞ்செய்யப்
பாலனானேனந்தோபரதவித்துழன்றுவாடி
யாலனேயாரூர்மேவுமப்பனேயஞ்சினேனே. (அ)

பொய்யெனும்புலன்களாலேபுலையனேனகப்பட்டந்தோ
மைவிழிமாதரோடுமெருவியேமாயைமூடிச்
செய்வதோர்வழியுங்காணேன்றீவினைக்குழியில்வீழ்ந்தே
னையனேயாரூர்மேவுமப்பனேயஞ்சினேனே. (கூ)

சம்பந்தராகிவந்துசமணரைக்கழுவின்மாட்டி
யெம்பந்தமகலவீட்டியெளியனைத்தடுத்தாட்கொண்ட
வும்பர்தம்பெருமானேயென்றுருகியேநினமுவாழ்த்த
அன்பினில்விளையுமாரூரப்பனேயஞ்சினேனே. (க0)

நாவினாற்பாடவல்லநாவினுக்கரயர்தம்மைத்
தாவியேசிங்கமாகித்தரணியிற்றடுத்தாட்கொண்டு
நாவலவூரர்க்காகநங்கைபாற்றூதுசென்றாய்
யாவர்க்குமேலாமாரூரப்பனேயஞ்சினேனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## சீகாளத்தி திருநேரிசை.

———:0:———

திருச்சிற்றம்பலம்.

நாட்டிலேறுன்றன்பாதனைந்துளமுருககில்லேன்
கூட்டினுளைவர்வந்துகொடுந்தொழிற்பலவுஞ்செய்தே
யாட்டுவாரவர்கட்கஞ்சியடியனேனயர்ந்துநொந்து
காட்டினின்மிருகமானேன்காளத்திமலையுளானே. (௧)

இல்லறயோகியல்லேனிரந்துண்ணுந்துறவியல்லேன்
நல்லறஞானியல்லேனைந்துளமுருககில்லேன் [ன்
சொல்லறத்தொன்றுமல்லேன்றுணைவனையலந்துபோனே
கல்லுவல்லிருப்புநெஞ்சன்காளத்திமலையுளானே. (௨)

மருநிடங்கொண்டதேவேமான்மழுக்கையினானே
துரிதமாயைவர்வந்துருதுகள்பலவுஞ்செய்யச்
சுருதியின்வழியிற்சென்றுசோதியென்றேத்தகில்லேன்
கருதிநீயெனையாளெந்தாய்காளத்திமலையுளானே. (௩)

விண்ணவரிடர்கடீரவிடத்தினையமுதாய்க்கொண்ட
வண்ணலேயலந்துபோனேனைவர்செய்துன்பமெய்தி
நண்ணியேநாதாவென்றுனைந்துளமுருகியேத்திக்
கண்ணிடந்தப்பவல்லேன்காளத்திமலையுளானே. (௪)

என்னுளேயைவர்தோன்றியெலும்புதோல்சதமென்றெண்
முன்னவன்பாதநண்ணிமுறைமுறைபணியகில்லேன் [ணி
றன்னவன்முனேவந்துதமியனைத்தடுத்தாட்கொள்வாய்
கன்னல்சேரம்மையெந்தாய்காளத்திமலையுளானே. (௫)

காலனார்வருதன்முன்னேகண்கள்பஞ்சடையாவண்ணம்
ஓலமென்றன்னையேத்தியுள்ளுளேயொன்றாய்த்தோன்றிப்

பாலனென்றென்னைத்தாவிப்பரமனீகாக்கவேணுங்
காலனையுதைத்தவெந்தாய்காளத்திமலையுளானே. (சு)

உடலைநான்சதமென்றெண்ணியுன்னையுள்வைக்கமாட்டேன்
சுடலையினடனமாடுஞ்சோதியேயலந்துபோனே
னடல்விடைக்கொடியினானேயப்பனேயஞ்சலென்னாய்
சடல்விடமுண்டவெந்தாய்காளத்திமலையுளானே. (எ)

அண்டனேயமரரேற்றுமாவடுதுறையுளானே
தொண்டனேனலந்துபோனேன்சூழ்வினைக்கடலின்மூழ்கி
யெண்டிசையெங்குமானவீசனேயஞ்சலென்னாய்
கண்டனேகலங்குகின்றேன்காளத்திமலையுளானே. (அ)

ஆத்தியோடறுகுகொன்றையரவுடன்மதியஞ்சூடிக்
கூத்துகந்தாடுவோனேகொடியனேனலந்துபோனே
னேத்தினானுந்தன்பாதமெந்தநாளடைவதெந்தாய்
காத்துநீதடுத்தாட்கொள்வாய்காளத்திமலையுளானே. (சு)

செற்றமுஞ்செருக்குமுள்ளதீயராமைவராலே
முற்றிலுமலந்துபோனேன்முதுகுன்றின்மேவினானே
சற்றுநீயென்னுள்வந்துதன்னவனாகும்வண்ணங்
கற்றைவார்சடைசேரெந்தாய்காளத்திமலையுளானே. (கo)

திருச்சிற்றம்பலம்

---

## திருவண்ணாமலை திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

அகந்தியர்பாதங்கண்டேயனுதினமுருகுகின்றேன்
செகத்தினின்மயக்கந்தீர்த்துத்திருவடிசிரசிற்சூக்கிப்

பகைத்தொழில் யாவுமாற்றிப்பதமதுதந்தேயெந்த
னகத்தினிலிருந்தேயாள்வாயருணைமாநகருளானே. (க)

சிட்டர்கள்சித்தர்பாதஞ்சிவனடியார்கள்பாதம்
பட்டினத்தடிகள்பாதம்பத்திரகிரியார்மற்றும்
மட்டிலாவடியார்பாதமைந்தனானுருகியேத்த
வட்டனேகிருபைசெய்வாயருணைமாநகருளானே. (உ)

மெய்யடியார்கள்பாதம்வேண்டினேன்வேண்டிநித்தம்
மெய்யெலாங்கண்ணீர்சோரவிரும்பியேயுருகியேத்தப்
பொய்யெலாநீக்கியாள்வாய்புகலியில்வாழுந்தேவே
அய்யனேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (ந)

சகர்முதலானோரெல்லாஞ்சொரூபத்திலின்றுரெந்தாய்
பகைவராமைவராலேபாலநான்றவித்துவாடி
யகமெகவழுதுபோற்றியையனேகைதாவென்றே
னகமகிழ்ந்தென்னுள்வாவாவருணைமாநகருளானே. (ச)

உருகியேயுந்தன்பாதமுண்மையாயிலடவிடாமற்
பெருகியேதினமும்பேணப்பெரியவாகிருபைசெய்வாய்
முருகனைப்பெற்றமூர்த்திமுடிந்திடமோனமாகி
யருவுருவாகிநின்றவருணைமாநகருளானே. (ரு)

பொருளுமாய்ப்பூவுமாகிப்பூவுக்குள்வாசமாகி
யிருளுமாய்வெளியுமாகியேகமாய்நின்றவொன்றை
மருளிநானடைவதென்றோமன்றினுளாடுவானே
யருளியேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (சு)

ஓதியுமுணரமாட்டேன்யோனிவாய்க்குழியிலாழ்ந்து
சாதியோகணக்குங்காணேன்றரணியிற்பிறந்திறந்து
பாதியோருமையாள்கொண்டபாதனேயாற்றேனந்தோ
ஆதியேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (எ)

அட்டமா மூர்த்தியாகியம்பலத்தாடுஞ்சோதி
மட்டிநானென்னசெய்வேன்மைந்தவாவென்றுயில்லை
கட்டிடுங்காலன்வந்தாற்கலங்கினானுழலாவண்ணம்
அட்டியில்லாமற்காப்பாயருணைமாநகருளானே. (அ)

காலனார்வருவரென்றுகலங்கியேபுலம்புகின்றே
னேலமென்றும்பர்வேண்டவொருநொடியதனிற்காந்தாய்
பாலனன்றவியாவண்ணம்பாதமேசிரசில்வைத்துச்
சீலமாயஞ்சலென்னாய்திருவணாமலையுளானே. (கூ)

எல்லையிலாதசோதியெந்தையைக்காணு நாயேன்
கல்லினும்வலியநெஞ்சன்கருதியேயுருகமாட்டேன்
வல்லவாகிருபைதந்துவல்வினையகலநோக்கி
யல்லலையகற்றியாள்வாயருணைமாநகருளானே. (க0)

முப்பதோடாறுமாகிமுயங்கியேயப்பானின்று
தற்பரமானசோதிதனக்குளேதனித்தவொன்றைச்
செப்பவும்வாயுமுண்டோதேடுவோர்தேட்டமான
வப்பனேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவண்ணாமலை திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

குண்டகரைவர்வந்துகொடும்பழிமிகவுஞ்செய்து
கெண்டையங்கண்ணார்காலிற்கிடத்தியேகுழியிலாழ்த்தச்
சண்டனார்கையிற்சிக்கித்தமியனேனுழலாவண்ண
மண்டனேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (க)

மணமதுசெய்துவாழ்ந்துமைமர்தருஞ்சுற்றமாகிப்
பிணமதாய்விழக்கண்டும்பிரிந்தறியாதமுடன்
சிணமதின்மறித்துமாண்டுதிநரகமுந்தாவண்ண
மணியருணமலையுளானேயப்பனேயருள்செய்யாயே. (௨)

செப்புமாமுலையார்வாழ்வுநிசரகென்றுநாயேன்
றப்பிபேயோடிவந்துசண்முகாவென்றுவீழ்ந்து
ஒப்பித்தேனுடலைபாவுமுருகியேயழுதுவீழ்ந்தே
னப்பனேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (௩)

ஒப்புடனுவமைபேசியுயிரையேவாங்குமாதர்
செப்புவாரினிமையாகச்சேயிழையோரேகாலன்
றப்புறமாகவெண்ணித்துணையென்றேன்சோதிபாத
மப்பனேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (௪)

அந்தகன்வேறேயில்லையாயிழையோரேகாலன்
மைந்தனான்றிறமாயெண்ணிமாதேவர்பாதநாடித்
தந்தைதாய்நீயேயல்லாற்றமியனேன்வேறுகாணே
னந்தனாவஞ்சலென்னாயருணைமாநகருளானே. (௫)

கண்ணினாற்கண்டபோதேகடுகியேயவர்வந்து
புண்ணெனுங்குழியிலாழ்த்திப்புந்தியைமயங்கச்செய்து
நண்ணியேமாதர்காலினாயைப்போல்வீழச்செய்தா
ரண்ணலேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (௬)

கண்டனேகாளகண்டாகடவுளேகயிலைவாழ்வே
தொண்டனேனுன்னையல்லாற்றொழுவனோமற்றொன்றெண்
யெண்டிசையெங்குமாகியென்னுளேயொன்றாய்நின்ற [ணி
வண்டனேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (௭)

எட்டெனிரண் டுமாகியிரண் டுமேயொன் றாய்நின் று
சிட்டர்கட்குள்ளேயாகித்திந்திக்குந்தெளிந்ததேனே
மட்டிறனுந்தன்பாதமனத்தினிலுருகும்வண்ண
மட்டனேபஞ்சலென்னையருளைமாநகருளானே. (அ)

மூப்பதுபிறப்பதில்லைமுதுகுன்றமுடையகோவே
சேர்ப்பதுசாட்டகத்தேதிரிவதுகச்சிநாடு
காப்பதுவேளூர்சென்றுகருதிக்சாரோணமேவி
யார்ப்பரித்தஞ்சலென்னையருளைமாநகருளானே. (கூ)

எண்ணாதார்புரங்கண்மூன்றுமெண்ணியேயெரித்தானாகி
யுண்ணாதநஞ்சையுண்டேயும்பர்கடம்மைக்காத்தாய்
கண்ணாகியெங்குத்தானாய்க்கதிர்மதியொளியாய்நின்ற
அண்ணாமலைபுளானேயப்பனேயருள்செய்யாயே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## பொது நேரிசை.

---

திருச்சிற்றம்பலம்.

எலும்பினைப்பெண்ணாச்செய்தவெந்தையைக்காணாயேன்
புலம்பியேவாடுகின்றேன்புகலியில்வாழுந்தேவே
சலங்கொடுபூவுங்கொண்டுசெம்பந்தர்பாதஞ்சேரச்
சிலம்பொலிகாட்டியாள்வாய்தில்லைமாநகருளானே. (க)

கடலினுட்கல்லினின்றவப்பரைக்கண்டுபோற்ற
வுடல்பொருளாவிமூன்றுமொப்பித்தேனைப்புக்கொள்வாய்
சடலமோசுமக்கமாட்டேன்றந்தையேயாற்றேனங்தோ
வடல்விடையானேயாரூரப்பனேயருள்செய்யாயே. (உ)

பரவைபாற்றூதுபோகப்பாடியவெந்தைபாதங்
கருதியேயுருகாநாயேன்காணுநாளெந்நாளோ.

திருவையாறகலாத்தேனேசிறியனேனுய்யும்வண்ண
மருவுருவானவாரூரப்பனேயருள்செய்யாயே. (௩)

வாதவூரெந்தைபாதம்வணங்கியேயுருகியேத்தத்
தாதனேதாயேயென்றுததாய்பியேபுலம்புகின்றேன்
வேதனைக்குழியிலாழ்ந்துவினையினாலழுந்தாவண்ண
மாதியேயஞ்சலென்றாயருணைமாநகருளானே. (௪)

வினையேபெரிதென்றெண்ணியுழன்றபுன்னார்கடோறு
நாயெனுமாயைமுடிநரகினிலாழ்ந்துநொந்தேன்
முனவனுவெந்துதனித்திடும்வழியைக்காட்டா
யானஞ்சுமாமோரூரப்பனேயஞ்சினேனே. (௫)

நல்லூரதனிற்சென்றுநன்மணஞ்செய்துவந்து
வல்லவனாகிநின்றுவந்தவர்தங்கட்கெல்லா
மல்லலையகலநோக்கியருள்வீடுகொட்டியாண்டு
தில்லையின்முடிந்துநின்றஜின்மயானந்தவாழ்வே. (௬)

அரசரைக்கண்டுபோற்றியரகராவென்றுவாழ்த்திப்
பரவியேயுருகியேத்தப்பதமதுதந்தேயாள்வா
யரவனேயப்பர்பாதமடியனேன்சிரசிற்றூக்கி
முறைவழிகாட்டிநிற்பாய்முதுகுன்றுடையகோவே. (௭)

புக்கொளியூரில்வந்துபுத்திரன்றனையழைத்த
சக்கரைக்கனியைத்தேனைச்சண்முகன்றாதையுன்னைச்
சிக்கெனப்பிடித்துநின்றேன்சிறியனேனுய்யும்வண்ண
மக்கரவணியுமாரூரப்பனேயருள்செய்யாயே. (௮)

புத்தரையாதில்வென்றபுண்ணியன்பாதங்காண
வெத்தனைநாளோநாயேனேங்கியேயலந்துபோனேன்

சித்தனாய்வந்தேயென்னுட்டிருவடிசிரசிற்றாக்கி
முத்தியின்வழியினிற்பாய்முதுகுன்றமுடையகோவே. (௯)

வாசமாமலருங்கொண்டுவணங்கியேயுருகியேத்த
நேசமாயாசைகொண்டேனிமலனேகிருபைசெய்வாய்
மாசிலாமணியேநாயேன்மயங்கியேயுழலாவண்ண
மாசையையகற்றியாள்வாயருணைமாநகருளானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவண்ணாமலை திருநேரிசை.

---

திருச்சிற்றம்பலம்.

ஆணுமாய்ப்பெண்ணுமாகியலியுமாயப்பாலாகிப்
பூணுவார்தங்கட்குள்ளேபூரணவடிவாய்நின்ற
காணுவைத்தானேநானாய்த்தனக்குளேயறியவேண்டி
யாணவநீக்கியாள்வாயருணைமாநகருளானே. (௧)

பெண்ணுமாயாணுமாகிப்பிரணவப்பொருளுமாகி
யுண்ணுவாருணவுமாகியுணர்வுக்குளறிவுமாகிக்
கண்ணுமாய்மணியுமாகிக்காரணகுருவாய்நின்ற
வண்ணலேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (௨)

பூதமோரைந்துமாகிப்புலன்பொறிபத்துமாகி
யோநவேகரணம்யாவுமொன்பதாய்ச்சமைந்தவீடு
நீதியாய்ப்பிரித்துநோக்கிநிச்சயமதனைக்காட்டி
யாதியேயஞ்சலென்னாயருணைமாநகருளானே. (௩)

சத்துடனசத்துமாகிச்சதசத்தைக்கண்டுநோக்கிச்
சித்துடன்சிவமாய்நின்றதேசிகவடிவைப்போற்றித்
தத்துவக்குப்பைகண்டுதள்ளியேயறிவாற்காண
வத்தனேயஞ்சலென்னாயருணைமாநகருளானே, (௪)

மூலமாமுடல்கண்மூன்றுமூன்றினிலிரண்டைத்தள்ளிச்
சூலநின்பாதங்காணச்சூக்குமவழியேசென்று
சேலனகண்ணாரியுந்திருவடிசிரசிற்றாக்கி
யாலனேயஞ்சலென்றாயருணைமாநகருளானே. (௫)

மாதரார்மழிக்குஞ்செல்வமாயவாழ்வென்றுநாயேன்
பாதமேகதியென்றெண்ணிப்பரமனேபரமாயெந்தன்
றந்தையேதாயேயென்றுதம்பியேபுலம்புகின்றே
னாதியேயஞ்சலென்றாயருணைமாநகருளானே. (௬)

மங்கைமார்கொங்கைநோக்கிமைந்தனானசைகொண்டு
தங்கமேகொடுத்துமாதர்தங்களின்காலில்வீழ்ந்து
றங்கியேவெகுநாளாகிநண்மையாயலுத்துப்போனே
னங்கணாவஞ்சலென்றாயருணைமாநகருளானே. (௭)

தோலையேதோலான்மூடித்துகிலையேயழகாய்க்காட்டிச்
சிலையோசிக்குநாற்றஞ்சிறுகுழிகெட்டநாற்றஞ்
சாலவேமயக்கஞ்செய்யுந்தாதிமார்வாழ்வுவேண்டே
னாலனேயஞ்சலென்றாயருணைமாநகருளானே. (௮)

வாயுமோர்நாற்றங்கண்டாய்வழுதலைமூக்குநாற்றஞ்
சாயுமோர்கண்கணாற்றஞ்சார்ந்திடுமுடலுநாற்றம்
பாயுமோர்புடவைநாற்றம்படுகுழியதிகநாற்ற
மாய்ந்துநீயெனையாட்கொள்வாயருணைமாநகருளானே. (௯)

வந்ததுமதிலேகண்டாய்போவதுமதிலேகண்டாய்
பந்தமாமுலையார்வாழ்வுபடுகுழிநரகக்குண்ட
மந்தகன்வாழும்வீடாமதுவலால்வேறுமுண்டோ
சிந்தையிலிருந்தாட்கொள்வாய்திருவணாமலையுளானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# திருவொற்றியூர் திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

எனக்கினிப்பயமதுண்டோவேகம்பமேவினானே
தனக்குளேதானே,தானாய்த்தனித்திடும்பெரியவாழ்வே
பனைக்கனிப்பழனமேவும்பரமனேபரமயோகி
யுனக்குநாநடிமையானேனொற்றியூருடையகோவே. (௧)

ஈன்றதோர்பசுவைக்காணாவிளங்கன்றுபோலநாயேன்
ஆன்றனேயுன்னைந்தேடியகங்குழைந்துருகிவந்தேன்
தோன்றிநீயென்னுளாகத்துணைவனேதுணையதாகி
ஊன்றியுன்னருளேயோங்கவொற்றியூருடையகோவே. (௨)

ஆலனேயாலகண்டாவாலவாய்மேவினானே
காலனைக்காலாற்காய்ந்தகருணையங்கடலேயெந்தாய்
பாலனான்றவியாவண்ணம்பாதமேகதியதாக
ஓலமென்றுனையடைந்தேனொற்றியூருடையகோவே. (௩)

மானையேகையிற்றாங்கிமங்கையையிடமாய்க்கொண்டு
ஆனையையுரித்துப்போர்த்தேயானைக்காவதனின்மேவுந்
தேனினுந்தெளிந்ததேனேதேடொணாக்கனியேநாயே
னானையேயொழித்தாட்கொள்வாயொற்றியூருடையகோவே. ()

மற்றுமோர்தேவரில்லைமாதவாவுன்னையல்லாற்
பற்றுமோநாயேனுள்ளம்பலபலதேவரென்றுஞ்
சுற்றமும்வாழ்வும்பொய்யேதுணைவனேநீயதாக
வுற்றுநானுனையடைந்தேனொற்றியூருடையகோவே. (௫)

அழுக்கினாலழுக்குக்குப்பையல்குலில்விளைந்தபாண்ட
மொழுக்கியேயொன்பதாகியுளுத்தவைப்புழுத்தகூடு

வழுக்கியேமண்ணதாகும்மாயவாழ்வுலகநீத்தே
யொழுக்கமாயுனையடைந்தேனொற்றியூருடையகோவே. (௬)

சுழித்தலைப்புழுத்தகூடுசுழல்கின்றகுமிழிபோலக்
கழித்தலேயொன்பதாலேகசியுமோர்நாற்றபாண்ட
மழித்தலேயாற்றேனந்தோவடியனேனலையாவண்ண
மொழித்துநீயெனையாட்கொள்வாயொற்றியூருடையகோவே.()

கட்டினேன்காலன்றன்னைக்கருதினேனுந்தன்பாதம்
வெட்டினேன்புலன்களெல்லாம்விழுங்கினேன்ஞானத்தீயாற்
ஒட்டியேதழையாவண்ணங்கிருபைதந்தெனையாட்கொள்வா
யொட்டியேயுனையடைந்தேனொற்றியூருடையகோவே. (௮)

ஆடினாய்காடுதன்னிலம்மையாள்காணநின்று
சூடினாய்கொன்றைமாலைதூக்கினாயடியாருள்ளே
நாடியேநாடிநாடிநைந்துநானுருகும்வண்ண
மூடியேயுனையடைந்தேனொற்றியூருடையகோவே. (௯)

நாதனேநங்கைமார்சுரூபகாஞானமூர்த்தி
வேதனேவேதநாதாவிண்ணவர்தலைவாவெங்கள்
தாதனேதாதாவெந்தன்றந்தையேயெந்தனுள்ளே
யோதியேயெனையாட்கொள்வாயொற்றியூருடையசோவே(௧௦)

தொள்ளலோரொன்பதாகித்தோன்றியபாண்டத்துள்ளே
கள்ளர்களைவர்க்காளாய்க்கழலடிமறந்துநாயேன்
பள்ளமாங்குழியில்வீழ்ந்துபரதவித்துழலாவண்ண
முள்ளத்திலிருந்தாட்கொள்வாயொற்றியூருடையகோவே.(௧௧)

சித்தமோர்தோணியாக்கிச்சினமெனுஞ்சரக்கையேற்றிப்
புத்தியோர்கோலாயூன்றிப்புனற்கடலோடும்போது

மெத்தவுங்காமக்காற்ருன்மறியும்போதறியவொண்ணு
வுத்தியாயுணர்வுநல்காயொற்றியூருடையகோவே. (௪௨)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேகம்பம் திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பொன்செய்தமேனியானேபுலிபதளாடையானே
முன்செய்தவினைகளெல்லாமுறித்தடித்தகலநோக்கிப்
பின்வருங்குற்றமெல்லாம்பெரியவர்பொறுக்கவேணு
மென்செயல்யாதொன்றில்லையேகம்பநாதனாரே. (௧)

உம்பர்கடம்பிரானேயொருவனேயுலகுக்கெல்லாஞ்
செம்பொனேமணியேதேனேதிருநடத்தரசேயெங்கள்
சம்புவேதந்தைதாயாய்த்தனிமுதற்பொருளாய்நின்ற
வெம்பெருமானேயெந்தாயேகம்பநாதனாரே. (௨)

அங்கணாவடியார்க்கெல்லாமாதியேயநாதியாகித்
திங்களோடரவுகொன்றைதிருமுடியதனிற்சூடி
மங்கையுந்தானுமாகிமயானத்திலாடுஞ்சோதி
யெங்களைக்காப்பதென்றோவேகம்பநாதனாரே. (௩)

கண்ணாயேழுலகுமாகிக்கருதுவார்தங்கட்குள்ளே
பண்ணாகிப்பாடலானபராபரப்பொருளேயெங்க
ளண்ணாவானந்தமானவமிர்தமேயாரூர்மேவி
யெண்ணாகியெழுத்துமானயேகம்பநாதனாரே. (௪)

பண்டமேயாண்டரங்காபரமனேபாமாவெங்கள்
தொண்டனேதொண்டர்க்கெல்லாந்துணைவனேசோதியான
வண்டனேயமரர்போற்றவாலங்காட்டமர்ந்தசோதி
யெண்டிசையெங்குமானயேகம்பநாதனாரே. (௫)

இம்மையுமறுமையாகியேமூலகெங்குமாகி
நன்மையுந்திமையாகிநான்மறைப்பொருளுமாகி
அம்மையுமப்பனாகியடியவர் தங்கட்குள்ளே
யெம்மையுமாண்டுகொள்வாயேகம்பநாதனாரே. (சு)

ஆறுபோலேகமாகியனுதினமுருகிவாழ்த்திக்
கூறுவார் தங்கட்குள்ளேகுடியதாயிருப்போனாகி
நாறுமாமலருங்கொண்டுநாடொறுமுள்குவார்க்கு
ஏறார்ந்தசெல்வனானவேகம்பநாதனாரே. (எ)

ஒளியினுள்ளொளியாய்நின்றவுத்தமாவும்பர்தேவ
தளிர்பொன்மெல்லடியாள்காணத்தனிநடமாடிநின்று
வெளியெலாமெங்குமாகிவேதங்கண்மறையேோத்த
யெளியனையாண்டுகொள்வாயேகம்பநாதனாரே. (அ)

தந்தைதாய்தாரமாகித்தாரணியிற்பலவுமாகி
மைந்தருஞ்சுற்றமாகிமாமனுமாமியாகி
யந்தணர்பலருமாகியருமறைமுனிவோரான
வெந்தையேயென்னையாள்வாயேகம்பநாதனாரே. (கூ)

நண்ணுவார்நாதர்கோடிநாடொறநாதாவென்று
உண்ணுவாரனந்தகோடியுருகுவாருன்னைத்தேடிப்
பண்ணினாற்பாடுவார்கள்பரவிநானுருலும்வண்ண
மெண்ணியேயென்னையாள்வாயேகம்பநாதனாரே. (க0)

பூசுரர்பலரும்போற்றும்பூதனேபூதநாதா
நாசமாமைவராலேநாயினேனாற்றேனந்தோ
வாசமாமலருங்கொண்டுவணங்கியேயுருகியேத்த
வீசனேகிருபைசெய்வாயேகம்பநாதனாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.



# திருவிடைமருதூர் திருநேரிசை.

———:0:———

திருச்சிற்றம்பலம்.

நரைப்பொடுமூப்புமில்லாநால்வர்கள்வேண்டவந்து
உரைப்பதேயாலின்கீழேயுண்மையேயிதுவென்றோதிக்
கரைப்பொடுகரைகாணாதகாரணவடிவைக்காட்டி
மறைப்பதைமாற்றியாண்டமருதமாநகருளானே. (௧)

கழுதைபோற்சுமந்துநாய்கள்கற்றதின்மனம்வையார்கள்
பழுதுமேபேசிப்பேசிப்பாரிற்பெண்ணாசைகொண்டு
முழுவதும்பொய்யேசொல்லுமூடர்களுறவுவேண்டே
னிழுதையேனுய்யக்கொள்வாயிடைமருதூரனோ. (௨)

கோழ்களேமிகவாய்க்கற்றுக்குணமிலார்ஞானம்பூண்டு
பாழ்குழியதனைத்தேடிப்பலபலபொய்கள்பேசிப்
பாழையேயாகிநாய்கள்பதறியேயுழிலரந்தோ
வேழையேனுய்யக்கொள்வாயிடைமருதூரனோ. (௩)

முந்திச்செய்வினையைக்காணார்மூர்க்கர்கள்கல்விகற்றுச்
செந்தமிழ்கற்றேனென்றுஞ்சிவஞானதேசியென்ப
ரந்திவெண்பிறையைச்சூடுமப்பனையுள்கமாட்டா
ரெந்தையேயென்னைக்காப்பாயிடைமருதூரனோ. (௪)

தொடுக்கவேமனமுமில்லார்கொடுமைகள்பலவுஞ்செய்து
நடுக்கமுற்றிடவேநாளைநமன்வரும்போதென்செய்வார்
தடுக்கவோவொருவரில்லைத்தம்பிரான்பாதமல்லா
லிடுக்கணைதீர்த்தாட்கொள்வாயிடைமருதூரனோ. (௫)

ஐவகையாதியாலேயடியனேனசப்பட்டந்தோ
வுய்வதோர்வழியுங்காணேனூத்தையேபெரிதென்றெண்ணி

மைவிழிமாதரோடுமெருவியேயுழல்வதல்லா
லெவ்வகையென்னைக்காப்பாயிடைமருதூரனே. (௬)

திங்களைச்சடையில்வைத்துத்தேவர்களிடுக்கண்டீர்த்தும்
மங்கையைப்பாகம்வைத்துமான்மழுக்கையில்வைத்தும்
பொங்கரவணிந்துநின்றும்பூசனைக்காவல்வைத்தா
யெங்களைக்காப்பதென்றோயிடைமருதூரனே. (௭)

நாகத்தையுரித்துப்போர்த்தநான்மறைப்பொருளேநாயேன்
றேகத்தைத்திராவிட்டாற்றமியனேனுய்யமாட்டேன்
மோகத்தைத்தீர்த்தேயாண்டுமுழுமுதல்வழியைக்காட்டி
யேகத்தோடென்னையாள்வாயிடைமருதூரனே. (௮)

விண்ணவர்தேவதேவேவிரும்புவார்மனத்துளானே
மண்ணெனுமாயவாழ்வுவேண்டவேவேண்டாமெந்தாய்
கண்ணினுமுன்னைக்கண்டுகருதினாலுருகும்வண்ண
மென்னுவாயேகநாதாவிடைமருதூரனே. (௯)

கலங்கவேயுமையாளஞ்சக்கயிலையையெடுத்தரக்கன்
மலங்கவேவிரலாலூன்றிமான்மழுத்தரித்தவள்ளல்
நலங்களிலெங்குமாகித்தனித்திடும்பெரியவாழ்வே
யிலங்கியேயென்னையாள்வாயிடைமருதூரனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.



## திருவிடைமருதூர் திருநேரிசை

திருச்சிற்றம்பலம்.

அந்தனேயமலமூர்த்தியந்தந்தவுயிர்கடோறும்
பத்திசீபாவையாட்டப்பலவுயிரசையுமந்தோ

முத்தொழில்நடத்துமந்தமூவரையசைத்துநிற்பீ
ரொத்திசைக்கமலவேலியிடைமருதிடங்கொண்டீரோ. (க)

பாலுடன்பழமுந்தேனும்பற்பலதூபதீப
மோலமென்றருகியேத்தியுள்ளங்கலிங்கக்கண்டு
சாலவேபூசைசெய்வோர்தனக்குளேதானேதானு
யேலஞ்சூழ்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரோ. (உ)

தற்பதத்தமர்ந்துநாயேன்சற்குருபாதநோக்கி
யற்பமாமாசைநீக்கியசிபதத்தமர்ந்தொன்றாகிச்
சிற்சபைக்கவசம்பூண்டுசெவனைச்சிவத்துளாக்கி
யிப்புவிகமலவேலியிடைமருதிடக்கொண்டாரோ. (௩)

பந்தமாந்துன்பநீக்கிப்பாவியேன்பவத்தைப்போக்கிக்
கந்தனார்வடிவாய்வந்துகருணையாங்குருவுமாகிச்
சிந்தையுட்சொருபங்காட்டித்திருவடிசிறசிற்சூட்டி
யெந்தையார்கமலவேலியிடைமருதிடக்கொண்டாரோ. (௪)

அஞ்சுவார்காலதூதரடியிணைகண்டபேணாக்
கெஞ்சுவார்கெதியேதென்றுகெண்டையங்கண்ணாள்காண
நஞ்சுண்டகண்டனானாரணனயனுந்தேட
விஞ்சிசூழ்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரோ. (௫)

ஆகமம்பலவுமாகியாறிருசமயமாகிப்
பாகமும்பலவுமானபரமனாராடல்தன்னைப்
போகமேபெரிதென்றெண்ணும்புல்லர்களறியவொண்ணு
வேகமாங்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரோ. (௬)

அண்டனேயமரர்கோவேயாண்டவாவென்றுபோற்றக்
குண்டகர்புரங்கண்மூன்றுங்கொதித்தெழச்சிரித்துநோக்கிச்
செண்டடித்திடபமேறித்தேவர்களஞ்சவெங்கு
மெண்டிசைக்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரோ. (௭)

முன்செய்தவினைகடீர்க்கும்முத்தனேமுதல்வாவென்றுந்
துன்பங்கடீர்ப்பாயென்றுஞ்சோதியேதுணைவாவென்று
மன்பினுருகிநாளுமகத்துளேயேத்தவல்லார்க்
கின்பமாங்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௮)

அங்கமேயெலும்புபூண்டாரல்லலைநீக்கவல்லார்
சங்கராசிவமேயென்றதனக்குளேதீபமேற்றிப்
பொங்கியுள்ளுருகுவார்க்குப்பூரணவடிவைக்காட்டி
யெங்குமாங்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௯)

அந்தரத்தமர்ந்தொன்றாகியந்தவடிவாயெங்கும்
பந்தமும்வீடுமாகிப்பற்பலவண்டமாகி
மந்திரவடிவுமாகிமாமறைமுடிவுமாகி
யிந்துருக்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௧0)

ஒருவனேவுலகமாகியுளமதிற்கண்டதல்லான்
மருபொருளொன்றுங்காணேம்மலடியின்மைந்தர்போல
விருவினைநீநாவென்னுமிதுவதுநீக்கவல்லார்க்
கிருதயங்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௧௧)

அகங்கொண்டவரக்கனோடியடல்வரையெடுக்கவன்றோன்
முகங்களில்விழிபிதுங்கமுதல்வனோர்விரலையூன்றச்
சகமதிற்சமர்வதந்தலையறத்தரக்கனேத
விகபரங்கமலவேலியிடைமகிழ்ந்திடங்கொண்டாரே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாலவாய்த் திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பித்தனுபுலகுக்கெல்லாம்பிதாவுமேயாகியப்பாற்
சித்தனைத்தேவர்க்கெல்லாந்தேவனாய்நின்றதேவே

குத்தமேகோடிசெய்வேன்கொண்டுநீபொறுத்தேயாண்ட
அத்தனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (க)

மண்ணினிற்பிறந்துநாயேன்மாதரார்வலையிற்பட்டுக்
கண்ணினுனுன்னைத்தேடிக்கருதியேயுருகாநாயேன்
மண்ணிலேன்பிறந்தேனெந்தாய்மருளறுப்பும்வண்ண
மண்ணலேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (உ)

புழுப்பொதிந்தொழுகுங்கூரைப்புன்புலாலெலும்புந்தோலு
மழுக்கையேயழுக்கான்மெய்ந்தேயழிவதோர்வாழ்வுவேண்டே
னழுக்குன்றின்மேவிநின்றகருணையங்கடலேயெந்தா
யழைத்துநீயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (ங)

புன்புலாலெலும்புந்தோலும்புழுப்பொதிந்தொழுகுங்கூரை
யொன்பதுவாசல்வைத்தாயொருபொருளிலாதமாய
மென்பதேயோர்ந்துநாயேனேங்கியேபுலம்புகின்றே
னன்பனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (ச)

தந்தைதாய்தாரஞ்சுற்றமென்பதுதரணிதன்னிற்
பந்தமாமென்றுநாயேன்பாதமேகதியென்றெண்ணித்
தந்தையுநீயேயாகிற்றமியனேன்றவியாவண்ண
மந்தணவாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (ரு)

தந்தைதாய்தாரஞ்சுற்றந்தாணியிற்பற்றுநீக்கி
யந்தகன்வாராமுன்னமுன்னடியழுதுபோற்றப்
பந்தங்கள்யாவும்விட்டுப்பரமனேபரமாயெந்தன்
சிந்தையிலிருந்தாட்கொள்வாய்திருவாலவாயுளானே. (சு)

உம்பர்தம்பெரியகோவேயொருவனேயுலகுக்கெல்லாஞ்
செம்பொனம்பலத்தேநின்றுதேவியுந்தானுமாகி
நம்பியவடியார்க்கெல்லாநாதனுய்நின்றசோதி
அம்பிகையாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (எ)

ஆறுடனேந்தாருயவைப்புலவடிவுதன்னைக்
கூறுடன்பிரித்ருக்காணுர்குழியினில்வீழ்ந்துமாண்டு
நாறவேசரகிலாழ்ந்துநாய்நரிபேய்களாவார்
தேறவேயஞ்சலென்னுய்திருவாலவாயுளானே. (அ)

ஆலமாம்விடத்தையுண்டேயமரர்களிடுக்கண்டீர்த்துச்
சாலவேயடியார்க்குள்ளேதனித்திடும்பெரியகோவே
பாலனுன்றவியாவண்ணம்பரகதிவழியைக்காட்டிச்
சீலமாயெனையாட்கொள்வாய்திருவாலவாயுளானே. (கூ)

மாலுநான்முகனுங்கூடிமதிக்கொணுவடிவமாகிக்
காலனைக்காலாற்காய்ந்தகருதிடுமடியார்க்குள்ளே
சேலனகண்ணுளோடுறுஜின்மயப்பொருளாய்நின்ற
வாலனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (௧0)

புத்திசேர்சித்தம்யாவும்புலன்மனக்கருத்தொன்ருகித்
தத்துவக்குப்பைநீத்துத்தனக்குளேவிளக்கொன்றேத்திப்
பத்தியாயுருகுவார்க்குப்பரகதிகாட்டவல்ல
வத்தனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.



## திருப்பிரமபுரம் திருநேரிசை.

——:0:——

திருச்சிற்றம்பலம்.

அண்ணலேயெங்கள்கோவேயாண்டவாவுன்னையல்லாற்
பெண்ணுமோராணுமுண்டோபிரமன்மாதேவருண்டோ
கண்ணனேகாளகண்டாகலங்கிநான்வாடாவண்ணந்
திண்ணமாயெனையடைந்தேன்திருப்பிரமபுரத்துளானே. (௧)

ஆண்டவாவுன்னைத்தேடியனுதினமுருகுவார்க்குத்
தாண்டவமாடுவானேதமியனேன்வந்தடைந்தே
னாண்டுநீயென்னைக்காப்பாயாதியேயாகிமூர்த்தி
வேண்டியவினைகடீர்க்கும்வேணுமாபுரத்துளானே. (௨)

அத்தனேயமரரேறேயடியனேன்வந்தடைந்தேன்
புத்தியிலிருந்துகாப்பாய்புகலியில்வாழுந்தேவே
சிந்தனைதெளிந்ததேனேசிறியனேனுய்யும்வண்ணம்
வித்தகாவினைகடீர்ப்பாய்வெங்குருவுடையகோவே. (௩)

புலனெனுந்தோணிபற்றிப்புத்தியோர்சோலாயூன்றிப்
புலைகொலைச்சரக்கையேற்றிப்பெருங்கடலோடும்போது
மலமெனும்பாறைதாக்கிமறியும்போதறியவொண்ணாத்
தொலையொணாக்கடல்கடத்துந்தோணிமாபுரத்துளானே. (௪)

அந்தணனாகியங்கேயாலின்கீழமர்ந்தவெந்தாய்
சொந்தமாயுருகியேத்துந்தொண்டர்க்கேசோதிகாட்டு
மெந்தையேயெம்பிரானேயெளியனேனுய்யும்வண்ணம்
புந்தியிலிருந்துகாப்பாய்பூந்தராயுடையகோவே. (௫)

இன்றுமாய்நாளையாகியெப்பவுமொன்றாய்நின்று
நன்றுமாய்த்தீதுமாகிநாடெலாம்பலவுமானு
யென்றுணைந்துருகியேத்தியெளியனேனுய்யும்வண்ணஞ்
சென்றுநானுனையடைந்தேன்சிரபுரத்துடையகோவே. (௬)

மலைமகடன்னினோடுமோதவாநீயுந்தோன்றிச்
சிலைவடிவாகிவாழுஞ்செல்வனேதேவர்க்கெல்லாந்
தலைவனேயடியார்க்கெல்லாஞ்சற்குருவானவெந்தாய்
புலையனேன்வந்தடைந்தேன்புறவமாபுரத்துளானே. (௭)

அண்டனேயமரரேறேயரவொடுமதியஞ்சூடும்
பண்டமேபாண்டரங்காபரவுவார்தங்கட்கெல்லாந்
தொண்டனென்றுய்த்தோன்றித்தித்திக்குந்தெளிந்ததேனே
சண்டனையுதைத்தவெந்தாய்சண்பைமாநகருளானே. (௮)

பிரமன்மாலாறுகோடிபேணியுமளந்துகாணா
வொருமையாயிருமையாகியுயிர்கட்கோர்துணைவனாகி
யருமையாயருவுமாகியழலெரியுருவமானாய்
கருதுவார்தம்மைக்காக்குஞ்சாழிமாநகருளானே. (௯)

தாணுவேதம்பிரானேதலைவனேநின்றன்பாதம்
பேணுவார்தங்கட்கெல்லாம்பேதமையகலநோக்கிக்
காணுவாய்கருத்துளாகிக்கடவுளேயெங்கள்கோவே
கோணையோர்பிறையைச்சூடுங்கொச்சைமாநகருளானே. (௧௦)

எந்தையேயெங்கள்கோவேயேகம்பமேவினானே
பந்தமாம்பிணிசமர்க்கும்பரமனேபரமாவெங்க
டந்தையேநீயேயல்லாற்றரணியில்வேறொன்றுண்டோ
கந்தனையீன்றவெந்தாய்கழுமலநகருளானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்



வெள்ளியங்கிரிமேவிய

## பேரூர்திருநேரிசை.

:0:

திருச்சிற்றம்பலம்.

நங்கையாம்பச்சைவல்லிநயந்துளமகிழநோக்கி
யங்கமேயெலும்புபூண்டேயனலெரியாடுவோனே
திங்களுங்கங்கைசூடிதிருவேளூர்தனினின்ற
பிங்கலன்பெருமான்பாதம்பேரூரிற்பேணுநெஞ்சே. (௧)

அண்ணலேயமரரேறேயாவடுதுறையுளானே
கண்ணுமாயுலகமெல்லாங்கருதியேநோக்குவானே
யெண்ணுவார்மனத்துளாகியேகம்பமேவியெங்கும்
பெண்ணுமோடாணுமானபேருரைப்பேணுநெஞ்சே. (௨)

பொன்னம்பலத்துளானேபுள்ளிருக்குவேளூரானே
கன்னல்சேர்பச்சைவல்லிகருதவேமகிழநோக்கிப்
பன்னகாபரணவெங்கள்பாவங்கடீர்க்கவல்ல
பொன்னம்பலவாவென்றுபேரூரிற்போற்றுநெஞ்சே. (௩)

எச்சனைத்தக்கன்மற்றுமிடித்தழல்விழித்துநோக்கிக்
கச்சணிபச்சைவல்லிகண்டுடன்மகிழ்ந்துபாட
வச்சமாஞ்சுடலைதன்னிலனலெரியாடுஞ்சோதிப்
பிச்சனையுருகியேத்திப்பேரூரிற்பேணுநெஞ்சே. (௪)

அத்தனேயமரரேறேயாலங்காடமர்ந்துளானே
யெத்தனாயெங்குமாகியெவ்வுயிர்க்கிறைவனாகிச்
சித்தனாராடல்நோக்கித்தினந்தினமுருகியேத்திப்
பித்தனேபெருமானென்றுபேரூரிற்பேணுநெஞ்சே. (௫)

வெள்ளியங்கிரியின்மேவிவேதமோர்நான்குமோதிக்
கொள்ளிக்காடதனினின்றுகோதையோடாடியங்கே
வெள்ளெருதொன்றிலேறிவெண்காடதனிற்சென்று
பிள்ளையையுண்டோன்பாதம்பேரூரிற்பேணுநெஞ்சே. (௬)

குணத்தொடுகுறியுமில்லான்குருவுருவானசோதி
துணைத்தலையுலகுக்கெல்லாந்தோன்றியேயொன்றாய்நின்று
அணைத்துளேபிரமன்மாலையவர்களின்சிரங்கள்கொய்து
பிணத்தலைமாலையிட்டபெரியோனைப்பேணுநெஞ்சே. (௭)

இருளுமாயொளியுமாகியேகம்பமேவினனே
மருளர்தம்முறவுவேண்டேன்மாதவாவுன்றன்பாதத்
தருளதுதாரவேவேண் டுமடியவர்பலரும்போற்றப்
பொருளதுதந்துகாப்பாய்பேருரிற்பொலியுங்கோவே. (அ)

கெண்டையங்கண்ணுளோடுங்கைகயுஞ்சிரசிற்குடித்
தொண்டர்கள்பலரும்போற்றுந்தோணிமாபுரத்துளானே
செண்டடித்திடபமேறித்திருப்புகலூரிற்சென்று
பிண்டமுமண்டமாகிப்பேருரிலமர்ந்திட்டீரே. (௯)

கரும்பினேர்மொழியினுளாங்கச்சணிபச்சைவல்லி
வரும்புனனதியுஞ்சூழ்ந்தவளநகர்கயிலைமேவி
யரும்புமாமலருந்தூவியடியவர்பலரும்போற்றும்
பெரும்பொருளதனையுள்கிப்பேருரிற்பேணுநெஞ்சே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## புள்ளிருக்குவேளூர் திருநேரிசை.

---:o:---

திருச்சிற்றம்பலம்.

அனைவர்க்கும்பிணிகள்தீர்த்தேயவரவர்கருத்துப்போல
அனைவர்க்குங்கருணைதந்தேயாண்டிடுமமரர்கோவே
தனையனுந்தையலம்மைதானுமோர்மருந்துமாகிப்
புனலுடன்மதியஞ்சூடும்புள்ளிருக்குவேளூரானே. (௧)

ஆத்தியுங்கொன்றைசூடியாலவாய்மேவினனே
யேத்தினேனுன்றன்பாதமெளியனேனுய்யும்வண்ணங்
கார்த்திகைமுருகர்தோன்றிக்கருதியேயுனக்குஞானம்
பூர்த்தியாயோதக்கண்டேன்புள்ளிருக்குவேளூரானே. (௨)

தோகையாந்தையலம்மைதுணையுடன் றனயனோடும்
ஏகமாய்மூவர்சேர்ந்தேயேழைகள்பிணிகடீர்த்துப்
பாகமாய்மண்ணைத்தர்துபணமதுகொள்வர்போலும்
போகமும்யோகமானபுள்ளிருக்குவேளூரானே. (௩)

ஓங்கலர்கொன்றைசூடிக்குற்றாலமேவினானே
பாங்குடன்மலர்கவேிப்பணிந்துளமுருகுவார்க்குக்
காங்கயன்முருகன்றன்னிக்கருதியேதாலும்வந்து
பூங்குழலுமையோடாடும்புள்ளிருக்குவேளூரானே. (௪)

சித்தனேதேவர்கோவேசிறியனேன்றிகைத்துநாளும்
மெத்தவேபிறவிநோயான்மெலிந்துநானயர்த்துப்போனேன்
சத்தனேகருணைசெய்வாய்கைலையின்மேவினானே
புத்தியிற்போற்றுகின்றேன்புள்ளிருக்குவேளூரானே. (௫)

ஓமெனுமெழுத்தைந்துள்ளேயுள்குவார்மனத்துளானே
ஏமனாலனேகநாளாயிடியுண்டேயலந்துபோனேன்
காமனைக்கண்ணாற்காய்ந்தகருணையங்கடலேயெந்தாய்
பூமலர்சாத்தகில்லேன்புள்ளிருக்குவேளூரானே. (௬)

ஆதியாங்கங்கைசூடியாலங்காடமர்ந்தகோவே
பாதியுமுமையாள்கொள்ளப்பரிந்துடனுவோனே
சோதியாயண்டமெல்லாஞ்சுடரொளியுருவமான
பூதிநானடைவதென்றோபுள்ளிருக்குவேளூரானே. (௭)

ஆண்டவாவெங்கள்கோவேயமரர்கள்பலரும்போற்றத்
தாண்டவமாடுவோனேதமியனேனடங்காண
வேண்டினேனுன்றன்பாதம்விரும்பியேபுலம்புகின்றேன்
பூண்டுநானுன்னைச்சேரப்புள்ளிருக்குவேளூரானே. (௮)

செற்றலர்புரங்கண்மூன்றுஞ்சிரித்தழலெரித்ததேவே
மற்றுமோர்தெய்வங்காணேன்மாநிலந்தன்னிலோர்ந்து
பற்றினேனுன்றன்பாதம்பரமநீபற்றிக்கொள்வாய்
புற்றில்வாளரவுசூடும்புள்ளிருக்குவேளூரானே. (௯)

சாம்பலோடறுகொன்றைதணலெரியாடுவோனே
தேம்பியேயுருகுவார்க்குத்தீவினைபலவுநீக்கு
மாம்பழுமல்லிமுல்லையரவுடன்கங்கைசூடிப்
பூம்புகலூரின்மேவும்புள்ளிருக்குவேளூரானே. (௧௦)

தையலுந்தனயனோடுந்தானுமோர்மருந்துமாகிப்
பையவேயுலகில்யாவும்பற்பலபிணிசமீர்க்கு
ஐயனேயெங்கள்கோவேயாண்டவாவுன்னையல்லாற்
பொய்யர்களுறவுவேண்டேன்புள்ளிருக்குவேளூரானே. (௧௧)

தொள்ளலோரொன்பதாகித்தோற்றகுப்பாயத்துள்ளே
கள்ளர்களைவர்சூழ்ந்துகபடுகள்பலவுஞ்செய்யத்
துள்ளுமோர்மீனைப்போலதொண்டனேன்வாடாவண்ணம்
பிள்ளைபோலென்னைக்காப்பாய்புள்ளிருக்குவேளூரானே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கோடிகா திருநேரிசை.

---:o:---

திருச்சிற்றம்பலம்.

மாதர்களிருவர்வைத்தாய்மதியமுஞ்சடையில்வைத்தாய்
தீதிலாவடியாருள்ளேதினந்தினமாடலுற்றாய்
வேதமோர்நான்குமோதிவிரிஞ்சன்மாதேவரோடு
கோதிலாவானோரேத்துங்கோடிகாவுடையகோவே. (௧)

நஞ்சத்தைக்கண்டம்வைத்தாய்நாரணன்கண்ணிலொன்றைத்
தஞ்சமென்றடியிலேத்தச்சக்கரமவர்க்குத்தந்தாய்
வஞ்சகரைவர்செய்யும்வாதனைக்கலந்துபோனேன்
கொஞ்சமுந்தெளியகில்லேன்கோடிகாவுடையகோவே. (௨)

கணத்தினிற்கண்ணிலொன்றைக்கண்ணப்பர்கருதிச்சாத்தச்
சணத்தினிலங்கேதோன்றித்தன்மயமாக்கியாண்டாய்
பிணமெனுமூத்தைபேணிப்பேதையேனலந்துபோனேன்
குணமுநான்றெளியகில்லேன்கோடிகாவுடையகோவே. (௩)

உத்தமாவும்பர்கோவேயூத்தையைப்பெரிதென்றெண்ணிப்
பத்தனாயுன்றன்பாதம்பரவியேயேத்தகில்லேன்
சித்தமுமைவர்க்காளாய்நீசனேனலந்துபோனேன்
குத்தமுங்கோடிசெய்வேன்கோடிகாவுடையகோவே. (௪)

ஊத்தையேசதமென்றெண்ணியுடையவாவுன்றன்பாதம்
பூத்திடுமலர்கள்கொண்டுபூசைகள்பலவுஞ்செய்கேன்
நாத்தமாமுடலைப்பேணிநாயினேனலந்துபோனேன்
கூத்தநீதடுத்தாட்கொள்வாய்கோடிகாவுடையகோவே. (௫)

அரவமும்மதியும்வைத்தாயங்கனேகங்கைவைத்தாய்
பரவுவார்தங்கட்குள்ளேபாதமுஞ்சிரசில்வைத்தா
யிரவுடன்பகலுமாகியென்னையுன்னடியில்வைத்துக்
குரவனாய்த்தடுத்தாட்கொள்வாய்கோடிகாவுடையகோவே. (௬)

அடிமுடியயன்மாறேடவளவிலாவுருவாய்த்தோன்றி
யடியவர்தனக்குளாகியனலெரியாவொனே
செடியுறுபவங்கள்செய்துதீயனேனலந்துபோனேன்
கொடியனேனுய்வதென்றோகோடிகாவுடையகோவே. (௭)

மாயமாமாதர்வாழ்வைவமைந்தனனிசமென்றெண்ணித்
தாயத்தார்சுற்றமென்றுந்தயங்கியேயலந்துபோனேன்
நேயமோடுனதுபாதநினைவினுலேத்தகில்லேன்
கோயிலினின்றுமேவானேகோடிகாவுடையகோவே. (௯)

தோலினுளுதிரக்குப்பைசோற்றினன்மேய்ந்தகூரை
காலிரண்டதனைத்தாங்கிக்கனவுபோலழியக்கண்டுஞ்
சேலமாலையவராலேசெடியுறுபவங்கண்மேவிக்
கோலமாயலந்துபோனேன்கோடிகாவுடையகோவே. (௧)

ஆடினாய்சுடலைதன்னிலங்கனேயுமையாள்காணச்
சூடினாய்கங்கைதன்னைத்தொண்டர்கள்பலருமேத்திப்
பாடினாரனந்தகோடிபற்பலபணிகள்செய்து
கூடினாடைவதென்றுகோடிகாவுடையகோவே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## தனித் திருநேரிசை.

---

திருச்சிற்றம்பலம்.

ஊனையேகழித்துநோக்கியுள்ளமேகோயிலாக்கி
நானெனுமகந்தைநீக்கிநாதனென்றேத்துவார்க்குத்
தேனெனருசிக்குமங்கேதிருநடம்பொதுவாய்த்தோன்றித்
தானவனாகக்கண்டோர்தலைவர்க்குந்தலைவனாமே. (௧)

முப்பதோடாறுமாகிமுப்பாழிலுழலுங்கூரை
யுப்பிட்டபாண்டமாகியொன்பதுவாசலூன்றிச்
செப்படிவித்தைபோலச்சிணுஞ்சிணமழியக்கண்டுஞ்
சொப்பனம்போலேயாகிச்சுபிணமாயிற்றன்றே. (௨)

புலன்பொறிபூதமோடுபுவியுமாயாண்பெண்ணாகிச்
சிலந்திபோற்சிப்பாய்ந்தேறிச்சிற்றிடை முலையுமாகி
மலங்களோர்மூன்றுந்தோன்றிமைந்தருஞ்சுற்றமென்றுஞ்
சிலசிலசாதிதோறுந்தீநரகமுந்தினேனே. (௩)

தத்துவக்குப்பைகண்டுசோதனைநான்குநோக்கிச்
சித்தத்துட்டீபமேற்றித்திருவடியேத்துவார்க்குச்
சத்தமுமொடுங்கியங்கேதணலெரியுருவாய்நிற்கு
மத்தனார்வடிவுகண்டோரவர்களேயரனுமாமே. (௪)

மாயவன்பிரமனோடுமேற்றுமாமுனிவர்தேவ
ராயவன்பாதமேத்தியவர்களுமரனேயானார்
தாயகமதுவேகண்டீர்தம்பிரான்றானேதானாய்
வேயுறுதோளிகயாடுவிரிந்ததுபலவுமாமே. (௫)

புலனெனும்வேடர்தம்மைப்புத்தியாம்வாளினாலே
தலைபறுத்தைவரொன்றத்தனக்குளேவிளக்கொன்றேத்தி
யலைமனமடக்கிநித்தமகத்துளேயுள்குவார்க்கு
மலைமகள்கணவன்றோன்றின்மாதேவனவர்களாமே. (௬)

முப்புரமெரித்தநாளின்முதல்வனார்பாதந்தன்னை
யப்புமால்விடையாய்த்தோன்றியங்ஙனேதாங்கினானே
யொப்பிலானுருவமில்லானுருவமுமாகியுள்ளான்
செப்பொனாச்சோதிபாதந்தினந்தினஞ்சிந்திநெஞ்சே. (௭)

சுடலையினீறுபூசிச்சுடுபிணக்கூத்துமாடித்
திடமுடன்றேவியோடுசிறுநிலாவெறிக்குஞ்சென்னி
நடம்புரிபரமர்பாதநாடோறும்வணங்கிக்கண்டோர்
சுடுபிணமாகமாட்டார்சோதியுமாகுமன்றே. (௮)

கடல்வண்ணன் கண்ணிலொன்றைக் கழற்றியுன் பாதமேத்தித்
திடமுடனாழியேற்றுத் திருமாலாய்த் திசைகளெங்கும்
படியளந்துயிர்கட்கெல்லாம் பத்தவதாரன்காணும்
நடம்புரிபாதங்கண்டோர் நாதர்க்குநாதனாமே. (கூ)

ஒருவனேயுலகுக்கெல்லாமொருமூன்றுமூர்த்தியாகி
ஒருவனேயுடலுயிராயுலகெலாமாண்பெண்ணாகி
ஒருவனேயெட்டிரண்டாயுமையவளுடனேயாடி
ஒருவனார்பாதங்கண்டோருலகெலாமவர்களாமே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## குறைந்த திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

குன்றுபோற்பாவமூட்டைகொடுந்தொழிலவர்செய்யச்
சென்றுநான்சுமையாளாகித் தீவினைபலவுஞ்சூழப்
பன்றியோடனந்தகோடிபலவுடலெடுத்துநாயே
னின்றுமோர்நாளையில்லேனென்செய்வான்றோன்றினேனே.

தெளிவிலாச்சிந்தையாலேதியராமைவர்க்காளா
யுளுவைபோற்சினந்துநாயேனூத்தையாமுடலைப்பேணித்
தெளிவிலாச்சிந்தைமாதர்சிறுபுலியரவின்வாயா
லெளியனேனலந்துபோனேனென்செய்வான்றோன்றினேனே.

அண்ணலென்றேத்தமாட்டேனவராம்கள்வர்வந்து
புண்ணெனுங்குழியிலாழ்த்தப்புலையனேனலந்துபோனேன்
அண்ணலேநீயேவந்தேயடியனைக்காப்பாயென்றே
யெண்ணிநான்மூர்த்தனானேனென்செய்வான்றோன்றினேனே.

உலகமுமழிந்துபோகுமுடலுயிர்யாவும்போகும்
நலமிலாத்தோலைநாடிநங்கைமார்கொங்கைநோக்கிப்
பலபலதுயரமாகிப்பாவியாமைவராலே
யெலும்பினைக்கடித்தநாய்போலென்செய்வான்றோன்றினேனே.

முழியினுன்மருட்மொதர்மோகமேபெரிதாயெண்ணிக்
குழியினின்மனதைநாட்டிக்கொடுவினைநரகிலாழ்ந்து
நெளிவதோர்புழுப்போலொனுந்துநிமலனைமறந்துநித்த
மெளியனேனலந்துபோனேனென்செய்வான்றோன்றினேனே.

தந்தையுந்தாயுநீயேதமியனேன்மாயைமூடி
மைந்தருமாதரொன்றுமலங்களிலமுந்திப்போனே
னந்தகன்வாராமுன்னமையநீகாத்திடாயே
லெந்தையேபலந்துபோவேனென்செய்வான்றோன்றினேனே.

அன்னையுமப்பனீயேயவனியில்யாவுநீயே
பன்னகாபரணவென்றுபரவியேயேத்தமாட்டேன்
கன்னல்சேர்மாதர்வாழ்விற்கருதிநானைவராலே
யின்னமும்வழியுங்காணேனென்செய்வான்றோன்றினேனே. ()

ஆத்திமாமலர்கள்சூடுமெப்பனேயைவராலே
பார்த்துநானுன்னைக்காணேன்பரமனேநீயேவந்து
காத்துக்கொள்கறைசேர்கண்டாகருதியுன்பாதநோக்கி
யேத்தவுமாட்டேனெந்தாயென்செய்வான்றோன்றினேனே. ()

பன்னிருகண்கடோன்றிப்பாருலகழிக்குமன்னன்
றன்னவன்றானேயாகித்தணலெரிச்சுடராயெங்கும்
முன்னவனொன்றாய்நின்றமுடிந்ததோர்மோனவாழ்வை
யென்னுளேவைப்பதென்றோவென்செய்வான்றோன்றினேனே.

அங்கயற்கண்ணிதன்னோடானஞ்சமாடினானே
அங்கனாவென்றநாயேனடியிணையேத்தமாட்டேன்
மங்கைமார்தமக்கும்பொல்லேன்மான்மதிக்கையினானே
யிங்ஙானலக்குபோனேனென்செய்வான்றோன்றினேனே. ()

திருச்சிற்றம்பலம்

---

## குறைந்த திருநேரிசை.

———:0:———

திருச்சிற்றம்பலம்.

அடல்விடைக்கொடியினானேயாவடுதுறையுளானே
உடலையேபெரிதென்றெண்ணிபொருபொருளிலாதவாழ்வில்
மடல்விழிமாதராசைமாயையாயிருளாய்மூடி
யிடர்பட்டேயெமனுக்காளாயென்செய்வான்றோன்றினேனே.()

ஒருமையாயுன்னைப்போற்றியுள்ளத்தில்வைக்கமாட்டேன்
றருமனூர்கையிற்சிக்கித்தையலார்வலையிற்பட்டுக்
கருமிநானியமாட்டேன்கருதியுன்பாதநோக்கே
னிருவினைத்தீயில்வீழ்வேனென்செய்வான்றோன்றினேனே.(உ)

பலபலதுயரமாகிப்பாவியாமைவராலே
யலைகடற்றுரும்புபோலேயடியனேனலக்குபோனேன்
றொலையொணாப்பிறவிநோயாற்றுடியிடைமாதர்வாழ்வி
லிலவுதிர்சருகுபோலேயென்செய்வான்றோன்றினேனே. (௩)

அப்பனேயெங்கள்கோவேயடியனேனவர்க்காளாய்க்
கைப்பிடிக்கூர்மங்கொண்டுகெடிகியேயடுப்பிலேற்றிச்
செப்பொணாத்தணலைமூட்டத்திகைத்திமெதுபோனயே
னெப்படிப்பிழைப்பதெந்தாயென்செய்வான்றோன்றினேனே.()

முன்னைநான்வினையான்மூழ்கிமூர்க்கராமைவராலே
தன்னையுமுணரகில்லேன்றையலார்மையல்கொண்டு
பின்னைநான்பேதையாகிப்பெரும்புழுவாகிநொந்தே
யின்னமுன்பாதங்காணேனென்செய்வான்றோன்றினேனே. ()

பத்தியாய்ப்பணியகில்லேன்பாவியாமைவராலே
மெத்தவுமெலிந்துபோனேன்மெய்யனேவழியுங்காணேன்
சித்தர்கள்பெரியோர்பாதஞ்சேரவும்புத்தியில்லே
னித்தனைதுயருக்காற்றேனென்செய்வான்றோன்றினேனே. (௬)

சினமெனுந்துன்பக்கோலாற்றீயராமைவராலே
வினைபெனுங்கடலின்மூழ்கிவிதிவழித்தருமன்கையால்
மனமெனுந்தோணிபற்றிமாதரார்வலையிற்பட்டு
இனம்பிரிந்தேங்கிநாயேனென்செய்வான்றோன்றினேனே. (௭)

எத்தனையுகமோநாயேனெழுகடற்பிறவிநோயா
லெத்தனையோனிவாய்ப்பட்டெளியனேனலந்துபோனேன்
சித்தனென்றேத்தமாட்டேன்றீயராமைவராலே
பெத்தனைதுன்பம்வைத்தாயென்செய்வான்றோன்றினேனே. ()

ஆவதோர்வழிபுக்காணேனம்பலத்தாடிஞனே
பாவியாமைவராலேபற்பலதுயரமாகித்
தாவியேநின்னையேத்தித்தனையுணர்ந்தறியமாட்டே
னேவியேகாமநோயாலென்செய்வான்றோன்றினேனே. (௯)

சித்தமுந்தெளியகில்லேன்றீயராமைவராலே
நித்தமுந்துயரமாகிநிமலனென்றேத்தமாட்டேன்
மெத்தவுங்காமநோயான்மெலிந்துநானலந்துபோனே
னெத்தனைசாதியோதானென்செய்வான்றோன்றினேனே. (௧0)

நஞ்சணிகண்டத்தானைநாரியோர்பாகத்தானை
அஞ்சியேவாழ்த்தியேத்தியருளினாலுதித்தமாலை
வஞ்சகம்யாவும்விட்டுவாழ்த்தியேயேத்தவல்லார்
நஞ்சுலாங்கண்டத்தெங்கணாதனைநணுகுவாரே. (கக)

திருநேரிசை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பிரமபுரம் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

அத்திமுதலெறும்பீறுயனைத்துமாகி
யல்லவாயெல்லாமாயப்பாலாகிச்
சத்தியிடப்பாகமதாயமர்ந்திருந்து
சதுர்முகனைத்தலையரிந்ததலைவனாகிப்
பத்தியுடனடிதொழுதுபரவியேத்தும்
பத்தர்களைக்காத்தருளும்பாதமாகிச்
சித்திதருங்காழிநகர்த்தேவதேவே
சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (க)

ஒருருவேமூவுருவாயெங்குமாகி
யுடலாகியுயிராகிமலையுமாகிப்
பூருவமாயின்றுகிநாளையாகிப்
பூரணமாஞ்சொருபமதுதானேயாகி
யீருருவாயிமக்காடதனினின்று
மெளியேற்குணடமாடியேகமாகிச்
சீருடனேகாழிநகர்த்தேவதேவே
சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (உ)

காருகர்நமேனியனுமயனுஞ்சேடக்
கலைகாணுத்திக்கம்பந் தானேயாகிச்
சீருகந்தசுந்தரியோர் பாகமர்கித்
தேடுதற்கரிதானசெழுந்தேனுகிப்
போருகந்தபுரமூன்றுமெரியச்செய்து
புரந்தரன்மாறேவர்களுநாணவங்கே
தேருகந்தசாழிநகர்த்தேவதேவே
சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (ரு)

அண்டபிண்டங்கலந்துநின் றப்பாலாகி
யாடுகின்றசுயஞ்சோதியருளைத்தேடிக்
கண்டமாலயன்முதலோர்தினமும்போற்றக்
கவுணியர்க்குப்பால்சுரந்தகலசந்தாங்கி
வண்டமரும்பூங்குழலாளமர்ந்துசூழ
வானவர்க்காநஞ்சுண்டவள்ளலாகித்
தெண்டமருந்திருப்புகலித்தேவதேவே
சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (சு)

உடலாகியுயிராகியுள்ளுமாகி
யுள்ளுளேயறிவாகியகண்டமாகிக்
கடலாகிக்கலையாகிக்கலைகடந்து
கருதுவார்கருத்துளேதனித்துநின்று
திடலாகித்திக்காகித்தேசமாகித்
தேசமெங்குஞ்சிறிதுமாய்ப்பெரிதுமாகிச்
செடிமலர்சூழ்திருப்புகலித்தேவதேவே
சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (எ)

ஊன்பொருளாயுலகாகிமலையுமாகி
யுள்ளாகிப்புறம்பாகியொன்றாய்நின்று

வான்பொருளாயிரவாகிப்பகலுமாகி
        வானுலகங்கடந்துநின்றவள்ளலாகி
மீன்விழிச்சுந்தரியாள்மகிழ்வோனாகி
        யிருகாதலடியார்கட்கமுதமாகித்
தேன்பொருந்துந்திருப்புகலித்தேவதேவே
        சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (௬)

பாராகிவிண்ணாகிப்பதியுமாகிப்
        பலவுயிராய்ப்பரலோகந்தானேயாகிப்
பேராகிப்பெருமையுடன்சிறுமையாகிப்
        பெரியோராய்ச்சிறியோருந்தானேயாகி
யூராகியுட்பொருளும்வெளிப்பொருளுமாகி
        யுண்மையுமாயின்மையுமாயல்லவாகிச்
சீரானவெங்குருப்பெரியகோவே
        சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (௭)

மூலமுதற்பொருளாகிமுப்பாழாகி
        முப்பாழுக்கப்பாலாய்மோனமாகிக்
காலமொருமூன்றினுமாய்க்கலந்துநின்று
        கசிந்துருகுமடியார்க்கேகாண்பானாகி
ஆலவிடமுண்டுகந்தவமரரேறே
        அடிநாயேனலையாமலுய்யும்வண்ணஞ்
சீலமுடன்றிருப்புகலித்தேவதேவே
        சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (௮)

அருவாகியுருவாகியகண்டமாகி
        யாதிநடுவீறாகியனாதியாகிக்
கருவாகிக்கருக்கலந்துகடந்துநின்ற
        காரணமாய்க்கலைகளாய்க்கதிக்குகந்த

குருவாகிக்குற்றமற்றகுணமாங்குன்றே
சொடியேனானலையாவண்ணந்
திருவாகித்திருப்புகலித்தேவதேவே
சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (கூ)

மலைமகளையிடப்பாகம்மகிழ்வோனாகி
மலர்களொடுசெலமகளுமநியஞ்சூடி
மலைகடனஞ்சுண்டங்கேவமரர்போற்ற
வடியார்கள்கொண்டாடுங்சருணையாகிக்
கலைஞானங்கல்லாமற்கற்றுணரக்
கடயனேன்வந்தடைந்தேன்கிருபைசெய்யுஞ்
சிலைவடிவாந்திருப்புகலித்தேவதேவே
சிறியேற்குன்னருள்காட்டித்தெரிவிப்பாயே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## கோயிற் பூரணத்திருத்தாண்டகம்.

சிவனுருவம்.

திருச்சிற்றம்பலம்.

சூலமொடுமொன்மழுவுந்தோன்றுந்தோன்றுஞ்
சுடலைதனிநடனமதுதோன்றுந்தோன்றுஞ்
மூலமொடுமுக்குணமுமங்கேதோன்று
முக்குணத்தின்மூவுருவந்தோன்றுந்தோன்றும்
வேலைவிடமுண்டிருண்டகண்டந்தோன்றும்
வெண்பொடியும்வெண்குழையுந்தோனறுந்தோன்றுஞ்
சீலமுடன்சின்மயமாஞ்சொருபந்தோன்றுந்
தேவதேவன்திருவடியிற்சேர்ந்திட்டோர்க்கே, (க)

பல்லுயிருந்தன்னகத்திற்றோன்றுந்தோன்றும்
பல்லுயிருந்தன்னகத்திலொடுக்கந்தோன்றும்
அல்லல்களைந்தற்றுமின்றவருளுந்தோன்று
மாணாகிப்பெண்ணாயவடிவுதோன்றுக்
தில்லைவனப்பொதுநடமுஞ்சேர்ந்துதோன்றுந்
தேவியவள்கண்களிக்கமகிழ்வுதோன்று
மெல்லையற்றிருக்குமங்கோர்முடிவுதோன்று
மெம்பெருமான்றிருவடிகண்டிசைந்திட்டோர்க்கே. ()

அந்தணனாய்வந்தங்கோர்மொழியுஞ்சொல்லி
டாவின்கீழமர்ந்திருந்தவடைவுதோன்றுந்
தொந்தமதாயயன்சிரசிலொன்றைத்தாக்கித்
தெருவுதொறும்பலியேற்றனென்றுந்தோன்றுந்
அந்தகனைக்காலாலடர்த்தனென்று
மடியாரைக்கவர்ந்தின்றவருளுந்தோன்றுஞ்
செந்தழலாய்ச்சின்மயமாய்ச்சொரூபந்தோன்றுந்
தேவதேவன்றிருவடியிற்சேர்ந்திட்டோர்க்கே. (௫)

கண்டவர்க்கேகாளகண்டங்கலந்துதோன்றுங்
கரைகாணாக்கச்சியேகம்பந்தோன்றும்
வண்டுளபமணிமார்பன்மத்தளமுங்கொட்ட
வாலையவள்கண்களிக்கநடனந்தோன்றுஞ்
சென்றுடனேரிடபமொடுகொடியுந்தோன்றுந்
தெண்டேடையசண்முகமும்வேலுந்தோன்று
மெண்டோள்கள்வீசிநின்றாடனென்று
மெம்பெருமான்றிருவடிகண்டிசைந்திட்டோர்க்கே.(௬)

பொங்கரவுபுலாலெலும்புபூணாய்த்தோன்றும்
புலியதளும்பூதங்கள்பலவுஞ்சூழச்

செங்கைதனிலனலேந்தியாடலுன்றுந்
தேன்மொழியாள்கண்களிக்கமகிழ்வானுேக்கிச்
செங்கமலமுகமலர்ந்துமறையுந்தோன்றுந்
திருமாலுநான்முகனுந்தேவர்போற்ற
எங்குநிறைந்தெல்லையற்றுேர்முடிவுதோன்று
மெம்பெருமான்றிருவடிகண்டிசைந்திட்டோர்க்கே. (ரு)

பூதமொடுபுலன்பொறிகள்யாவுமற்றுப்
பூவயன்மால்சிரமாலைபூணுய்த்தோன்றும்
காதமொடுவிந்துமற்றுநாதனேகானுய்
நாதாந்தப்பெருவெளியினடனந்தோன்றுங்
காதலுடன்கடுங்கலுழிக்கங்கைநங்கை
யாயிரமாமுகத்திஞெடுவானிற்றுென்றும்
போதமுடன்பூரணமாஞ்சொரூபந்தோன்றும்
புண்ணியஞர்பாதமதிற்பொருந்தினேர்க்கே. (சு)

உரமாகச்சலந்தரனையூடறுத்தே
யோராழிமுன்னீந்தவுண்மைதோன்றும்
கருமானினுரியதனையிடையிற்பூண்டு
கடியரவுகங்கைமதிசடையிற்றுென்றுந்
வருமாகளிற்றுரிவைப்போர்வையோடு
வரைமகளுஞ்சலமகளுமலிந்துதோன்றுக்
திருமாலுநான்முகனுந்தேடிக்காணுத்
தேவதேவன்றிருவடியிற்சேர்ந்திட்டோர்க்கே. (எ)

குற்றமொடுவெந்தனங்கன்றனையெரித்துக்
கொன்றைவன்னிகுழற்கணிந்தகோலந்தோன்றுஞ்
செற்றமொடுசெருக்குற்றபுரங்கண்மூன்றுஞ்
செற்றழலாய்ச்சிரித்தெரித்தசிலையுந்தோன்று

நெற்றிமேற்கண்டோன்றும்பெற்றந்தோன்று
  நேரிழைக்குநெறியுரைத்தநேர்மைதோன்றுஞ்
சிற்றுருவாய்ச்சிற்சொரூபந்தோன்றுந்தோன்றுஞ்
  சிவபெருமான்றிருவடியிற்சேர்ந்திட்டோர்க்கே. (௪)

நந்தியெம்பெருமானார்சொலுவுந்தோன்று
  நான்மறையினொலிதோன்றுநயனந்தோன்றுஞ்
சந்திரனுஞ்சூரியனுமொன்றாயேகிச்
  சகலகலைமுடிந்துநின்றதன்மைதோன்று
மிந்திரனோடயன்மாலுந்தேவர்யாரு
  மெம்பெருமானெம்பெருமானென்றங்கேத்தச்
சுந்தரமாஞ்சோதிமயசொரூபந்தோன்றுஞ்
  சோணேசன்றிருவடியிற்சொலித்திட்டோர்க்கே. (௫)

தத்துவங்கள்கடந்துநின்றப்பாலாகித்
  தன்மயமாய்த்தனித்தங்கேதானேதானாய்ச்
சித்தமொடுகுணங்குறிகள்யாவுமற்ற
  சின்மயமாஞ்சிற்சொரூபந்தோன்றுந்தோன்றும்
முத்திதருவழிதோன்றமோனந்தோன்றும்
  முழுமுதலாய்நின்றதொருமுடிவுதோன்று
மித்தனையுமறுமுகவனம்மையாலே
  யெம்பெருமான்றிருவடிகண்டிசைந்திட்டோர்க்கே. ()

ஒருருவாயண்டநிறைந்தப்பாலாகி
  ஒருருவேயிருருவாய்த்தோன்றுந்தோன்று
மிருருவாயிமக்காடதனினின்று
  மிருவடிவின்மூவர்களுமங்கேதோன்றும்
போருருவக்கடலிலங்கையரக்கர்கோனைப்
  பொறிகலங்கவடர்த்திட்டபொலிவுதோன்று

மேருருவப்பூண் முலையோர்பாகந்தோன்று
　　மெம்பெருமான்றிருவடிகண்டிசைந்திட்டோர்க்கே. ()

பலபலவாகினைவுகளைத்தூரத்தள்ளிப்
　　பதின்மூன்றுகுணங்களெலாமகலநோக்கிப்
புலனகற்றிமனதருகிப்பொருந்தினோர்க்கே
　　பூரணமாஞ்சொருபமதுதோன்றுந்தோன்றும்
மலமகற்றிமனதருகிக்கூடினோர்க்கே
　　மாசற்றமௌனநிலையங்கேதோன்றிச்
சிலைவடிவாய்ச்சின்மயமாய்ச்சொருபந்தோன்றுந்
　　தேவதேவன்றிருவடியிற்சேர்ந்திட்டோர்க்கே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.



## திருக்காளத்தித் திருத்தாண்டகம்.

---

திருச்சிற்றம்பலம்.

தொட்டிலங்குமான்மழுவுங்கையிற்றாங்கிச்
　　சுடர்க்கொன்றைபலமலருங்கங்கைசூடி
யெட்டிலங்குமூர்த்தியாயிசைந்துநின்று
　　யெருதேறியேந்திழையோர்பாகமாகி
விட்டிலக்குசடைமுடியும்வெண்ணூல்பூண்டு
　　விளைவாரூர்பதியாகச்செல்வார்போலக்
கட்டிலங்குதிருமேனிகண்டால்வீடு
　　காளத்திநாதனென்கண்ணுளானே. (க)

பெண்ணிருவர்கூடவேவைத்துக்கொண்டு
　　பேணவேயில்லையவர்பேணுவார்போ

லெண்ணியேயேழுலகுமலையுமாகி
யிடுபிச்சையேற்றுண்பதுவுங்கண்டீர்
நண்ணியெனைத்தருகொளுநாளு
நாதனேயென்றென்றுபரவியேத்திக்
கண்ணினாற்கண்டவர்க்கேகயிலைவீடு
காளத்திநாதனென்கண்ணுளானே. (௨)

பார்பெருகும்பருப்பதம்பல்லூழிநின்று
பரவுவார்தங்கட்குப்பாதங்காட்டிச்
சீர்பெருகுந்திருப்புகலூர்திருவெண்காடு
திருவானைக்காவுடனேதில்லைசென்று
நீர்பெருகுஞ்சடைமுடியின்மதியஞ்சூடி
நின்றியூர்நெய்த்தானமேவியங்கே
கார்பெருகுங்கண்ணுதலைக்கண்டால்வீடு
காளத்திநாதனென்கண்ணுளானே. (௩)

பண்ணார்ந்தமொழிமங்கைபாகமாகிப்
பாரிடங்கள்பலவாகிப்பரந்துநின்று
யெண்ணார்ந்தவேகம்பமேவியங்கே
யேத்தாதார்புரமெரித்தெருதொன்றேறி
யண்ணாமலையுமாயாறுசூடி
யரியயனுங்காணாதவழலுருவாயெங்குமாகிக்
கண்ணானதிருவடியைக்கண்டால்வீடு
காளத்திநாதனென்கண்ணுளானே. (௪)

வடிவுடையதிரிசூலங்கையிற்கொண்டு
வளர்சடைமேலிளமதியங்கங்கைசூடிப்
பொடியுடையதிருமேனிப்புலித்தோலாடைப்
பூம்புகலூர்பூந்துருத்திமேவியங்கே

யிடியுடையகளிற்றுரிவையீர்த்துபோர்த்து
    யிடைமருதுமேவியேந்திழையாளோடு
கடிமலர்சூடிருவடியைக்கண்டால்வீடு
    காளத்திநாதனென்கண்ணுளானே. (௫)

இரும்பார்ந்தமூவிலைவேல்கையிற்றாங்கி
    யேழுலகுமலைகளெல்லாங்கண்ணாய்மேவிச்
சுரும்பார்ந்தமறுமலர்கள்கொன்றைசூடிச்
    சுடரொளியாய்நெடுவோனாய்ப்பரந்துநின்று
தரும்பொருளாய்த்தலையாலங்காட்டிற்சென்று
    தனிநடமாயாடுகின்றதற்பரத்தைக்
கரும்பார்ந்ததிருவடியைக்கண்டால்வீடு
    காளத்திநாதனென்கண்ணுளானே. (௬)

பாசமாம்பலவாசையகலநோக்கிப்
    பரவுவார்தங்கட்கேபாதங்காட்டிப்
பேசவேயொருவராய்த்தானேவந்து
    பெருமானாய்த்திருவடியைச்சிரசிற்சூட்டி
யாசைசடைரவேயருளைத்தந்தே
    யாலங்காட்டம்பலத்திலாடுஞ்சோதிக்
காசைமலர்க்கங்கைசடைகண்டால்வீடு
    காளத்திநாதனென்கண்ணுளானே. (௭)

மங்லகதனைமணம்புணர்ந்துமதியஞ்சூடி
    மழுமானுங்கைப்பிடித்துநிற்பார்போலச்
செங்கண்வெள்ளேருதேறிமங்கையோடு
    தேவதேவன்திருவிளையாட்டனேகஞ்செய்து
யெங்கெங்குங்கண்ணுமித்தானேதானு
    யேகமாயிருவருமேநடனமாடிக்

கங்கைசூடிருவடியைக்கண்டால்விடு
　　காளத்திநாதனென்கண்ணுளானே. (௮)

திருமாலுநான்முகனுந்தேர்ந்துகாணு
　　நிக்கம்பமெங்குமாய்ப்பரந்துநின்று
பெருமானையவர்முன்னேவருவாராகிப்
　　பேறுநார்புரமெரித்தபெரியவாழ்வை
வருமாகரியொன்றைக்கதரப்போர்த்து
　　வானவர்க்காநஞ்சமுண்டமுதமூட்டிக்
கருமானினுடையிடையிற்கண்டால்விடு
　　காளத்திநாதனென்கண்ணுளானே. (௯)

பொன்றுதுபூஞ்சொன்றைப்புனலுஞ்சூடிப்
　　புள்ளிருக்குவேளூரும்பூண்டிமேவிப்
பின்றுழுஞ்சடையானைப்புரவம்பேணிப்
　　பேராவூர்ப்பெருந்துறையுமேவியங்கே
யொன்றாகியேழுலகுமலைகளாகி
　　யோருருவேமுவுருவாயெங்குமாகிக்
கன்றாப்பூர்த்திருவடியைக்கண்டால்விடு
　　காளத்திநாதனென்கண்ணுளானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## பிடித்தபத்து.

திருச்சிற்றம்பலம்.

ஒருவனேநீயேயுலகெலாமாகி
　　யும்பருமாகியும்பர்கட்சரசாய்ப்
பிரிவறநின்றாய்ப்பல்லுயிர்தோறும்
　　பித்தனேபெரியவெம்பொருளே

திருவுருவானசீருடைக்கழலே
செல்வமேசிவபெருமானே
யிருதயத்துன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (௧)

தந்தைதாயாகிச்சற்குருவாகித்
தரணியில்வந்தெனைப்பிடித்துப்
பந்தமதறுத்தாய்பரஞ்சுடர்மணியே
பாவியேன்பவவினையகற்றிச்
சிந்தையையுருக்குஞ்சீருடைக்கழலே
செல்வமேசிவபெருமானே
யெந்தையேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (௨)

அப்பனேயெந்தனுவியுட்பொருளே
யரியயன்றேடியுங்காணச்
செப்பொணச்சோதிதித்திக்குந்தேனே
செல்வமேசிவபெருமானே
தப்பிதம்பலவுஞ்செய்தநானல்லேன்
றவப்பெரும்பொருளெனுமெந்தா
யெப்பவுந்தேடிச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (௩)

அட்டனேயரசேவருட்பெருங்கடலே
யாவருமறிவதற்கெட்டாச்
சிட்டனேபத்தர்சித்தத்துணிறைந்த
செல்வமேசிவபெருமானே
மட்டிநாயடியேன்மனத்திருளகற்றி
மலமறுத்தாண்டமாமணியே

யிட்டமாயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (ச)

அன்னையேயப்பாவருந்தவப்பொருளே
வன்பினிவிளைந்தவாரமுதே
சின்னநாயடியேன்செய்பிழைபொறுக்குஞ்
செல்வமேசிவபெருமானே
மன்னவர்மன்னுமனத்துண்மாசறுத்த
மாதவாமைந்தநாளுன்னை
யென்றுளேகண்டுசிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (ரு)

அருத்தனேயோகவருந்தவப்பொருளே
யழிந்தநற்பழச்சுவைபோலுந்
திருத்தனேசிவமேநித்திக்குந்தேனே
செல்வமேசிவபெருமானே
நிருத்தனேநிமலாநீசநாயடியே
னிதநிதமனங்கசிந்துருகி
யிருத்தியேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (சு)

ஞானநன்மணியேநான்மறைப்பொருளே
ஞானமேயோகத்தின்பொலிவே
மோனமாயெங்குமுதிர்ந்தநற்பழமே
மூவர்க்குமுதற்பொருளாகித்
தேனினுமினியசீருடைக்கழலே
செல்வமேசிவபெருமானே
யீனனேனுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (எ)

ஆத்தியின்மேலிருந்தசெஞ்சுடரே
யப்பனேயருமறைப்பொருளே
மூர்த்தியேமுதல்வாமுக்கணுமுனிவா
முப்புரத்தவரைநீகாய்த்து
பூர்த்தியாயெங்குநிறைந்தநற்சோதி
புண்ணியாநிதமுநாயடியே
னேத்தியேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (௮)

அண்டனேயரசேவமரர்கண்முதல்வா
வப்பனேயடியிணைபரவுந்
தொண்டர்கட்கரசேசோதிமாமணியே
சூழொளிச்சூலமான்றலங்கத்
தெண்டெண்டேந்துஞ்செழுஞ்சுடர்மூர்த்தி
செல்வமேசிவபெருமானே
யண்டனேனுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (௯)

கச்சியினரசேகடுவிடமுண்டகருணையங்கடலே
கைலையின்மேவுஞ்
சிற்சிவப்பொருளேபத்தர்சிக்கெனப்பிடித்த
செல்வமேசிவபெருமானே
யச்சமுற்றடியேனல்லலைக்களைந்தா
யப்பனேயொப்பிலாமணியே
யிச்சைவைத்துன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.



# மௌனகுரு வணக்கம்.

—:o:—

திருச்சிற்றம்பலம்.

எந்தனுக்குளின்பமதாயினிக்குந்தேனு
யினிப்பதற்குண்மேலானவினிப்புமாகிக்
கந்தனொடுகணபதியின்பாதம்போற்றிக்
கனகடந்தோர்க்கினியபழக்காட்சியாகிப்
பொந்துக்குட்பொந்தாகிப்புலனகற்றிப்
போதமாய்ப்பூரணமாய்ப்புனிதவாழ்வாய்ச்
சிந்தைமணிச்சிவப்பொருளேமௌனவாழ்வே
சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (௧)

பற்பலவாஞ்சமயநெறிகடந்தப்பாலாய்ப்
பலதற்கம்பலபொருளுங்கடந்தப்பாலாய்த்
துற்பதமுந்தொல்வினைகள்கடந்தப்பாலாய்த்
தூலமொடுமுப்பாழுங்கடந்தப்பாலாய்
அற்பமுமோரணுவுமிலாதகண்டமாகி
யாருயிருந்தன்னகத்திலடக்கித்தானாய்ச்
சிற்பரமாய்நின்றவொன்றேமௌனவாழ்வே
சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (௨)

தற்பதமுந்தொம்பதமும்பிரித்துக்காட்டித்
தன்மயமாமசிபதமுந்தனித்துக்காட்டிப்
பொற்பதமாம்புண்ணியனார்பாதஞ்சேர்த்துப்
பூரணமாம்பெரியபொருடானேயாகிக்
கற்பனைகளோரணுவுமில்லாதாகிக்
காரணகாரியமெல்லாங்கடந்தப்பாலாய்ச்

சிற்பரமாய்நின் றவொன்றேமௌனவாழ்வே
சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (௩)

அருவுருவாயறிவதற்கோரளவில்லாதா
யகக்கண்ணுக்கினியசுடராகித்தானாய்க்
குருவுருவாயடைந்தவரைக்கொண்டப்பாலாய்க்
கூரவொருமுடிவிலதாய்க்குணக்குன்றாகி
யொருவடிவாயுகந்தென்னைக்கவசம்பூண்டே
யொருபொருளுமோரணுவுமில்லாதாகித்
திருவருளாய்நின்றவொன்றேமௌனவாழ்வே
சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (௪)

தத்துவமெலாங்கடந்துதானேதானாய்ச்
சற்குருவாய்த்தனித்தெந்தன்மயமேயாகி
வுத்துகந்துவொருமொழியாலோதிக்காட்டி
யோதியவதையின்னதெனவுரைக்கவொண்ணாச்
சத்துடனேசதசத்தாய்த்தாரணியாகிச்
சகலபொருடானாகியப்பாலாகிச்
சித்துருவாய்நின்றவொன்றேமௌனவாழ்வே
சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (௫)

எப்பொருளுந்தன்னகத்திலிசைத்துத்தானு
மின்னதெனவியம்புவதற்கிணையொன்றில்லா
வொப்பில்லாமெய்ப்பொருளாயுகந்தொன்றாகி
யுற்றுகந்தவடியார்கட்கூறுந்தேனு
மிப்புவியிலெவ்வுயிருந்தானேயாகி
யெத்தொழிலுந்தன்றொழிலாயிசைந்ததாகிச்
செப்பரியசிவப்பொருளேமௌனவாழ்வே
சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (௬)

எங்கெங்கும்பரவெளியாயிலங்குந்தேனு
விசைந்தடைந்தவடியார்கட்கினியபாகாய்ப்
பொங்கரவுபுலாலெலும்புபூண்டொன்றுகிப்
பூரணமாய்நின்றவிடம்புகலவொண்ணு
வெங்கள்குலதெய்வமாய்க்குருவுமாகி
யிசைந்தின்பமேலானவின்பமாகித்
திங்களணிச்செங்கரும்பேமௌனவாழ்வே
சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (எ)

எத்திசைகளெங்கெங்குஞ்சிவமாய்நின்றே
யெவ்வுயிருந்தன்னுயிராயிசைந்தப்பாலாய்ச்
சுத்தமொடுதூரமுமாய்ச்சமீபமாகிச்
சுடரொளியாய்த்தூவெளியாய்ச்சோதியாகிப்
புத்தியொடுசித்தமனம்யாவுமில்லாப்
பூரணமாய்ப்பொருந்தாகிப்புகலவொண்ணுச்
சித்துருவாய்நின்றவொன்றேமௌனவாழ்வே
சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (அ)

தந்தைதாய்சற்குருவாய்த்தாணுவாகிச்
சகலகலைநாளுகித்தலைவனுகிப்
பந்தமுமாய்வீடுமாய்ப்பலவுமாகிப்
பல்சமயகுருவாகிப்பான்மையாகி
நந்தியொடுநாரணனுமயனுமாகி
நாடுகின்றபலபொருட்குநாதனுகிச்
சிந்தைமணிச்சிவப்பொருளேமௌனவாழ்வே
சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (கூ)

எல்லையற்றசிவப்பொருளாயிலங்குந்தேவா
யிசைந்தடைந்தமேலோர்கட்கினியவாழ்வாய்த்

தொல்லையற்றதொண்டர்கட்குச்சோதியாகிச்
    சொல்லவொணாத்துரியத்தின்றுணையதாகிப்
பல்லுயிர்க்குட்பரம்பொருளாய்ப்பட்சங்காட்டிப்
    பல்லுயிரையசைத்துநிற்கும்பாதமாகித்
தில்லைநடச்சிவமணியேமௌனவாழ்வே
    சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (௰)

ஓடுகின்றமனமதனையொடுக்கவென்று
    லுள்ளுருகித்தினந்தோறுமுவந்துநோக்கச்
சாடுகின்றமனமதுவுஞ்சலித்துப்போகுந்
    தம்பிரான்நமக்குள்ளேதனித்தொன்றாகிச்
சூடுகின்றகங்கைசடைதரித்தவன்றான்
    றெல்லுலகிலுள்ளபொருளெல்லாநானாய்ந்
தேடரியசிவப்பொருளேமௌனவாழ்வே
    சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (௧௧)

ஓதுகின்றவுட்பொருளாயூறுந்தேனா
    யுலகிலுளபொருளெல்லாநானாய்க்காட்டுஞ்
சோதியிடபாதமதுதோன்றிநானாய்த்
    தொல்லையற்றபெரியோர்கள்பாதம்வாழி
மேதினியின்மெய்யடியார்பாதம்வாழி
    மெய்க்குருவின்பாதமென்றன்றலைமேல்வாழத்
தீதிலாச்சிவப்பொருளேமௌனவாழ்வே
    சின்மயானந்தமயத்தெய்வக்குன்றே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.



# திருக்கடவூர் போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வாரேறுவனமுலையாள்பாகாபோற்றி
வளர்மதியஞ்சடைக்கணிந்தவரதாபோற்றி
சீரேறுதண்புகலித்தேவேபோற்றி
திருக்கடவூர்வீரட்டச்செல்வாபோற்றி
நீரேறுசடையானேநிமலாபோற்றி
நினைந்துருகுமடியார்க்கணையாபோற்றி
காரேறுகண்டமுடையாய்போற்றி
காலனையன்றுதைத்தவனேபோற்றிபோற்றி. (க)

நாகமரைக்கச்சைகொண்டநாதாபோற்றி
நாரணியாள்பிரியாதநம்பாபோற்றி
வேகங்கெடுத்தாண்டவிமலாபோற்றி
வெற்றிவேற்குமரற்குள்விளைவேபோற்றி
காகமாய்க்கமண்டலங்கவிழ்த்தாய்போற்றி
கடவூர்வீரட்டக்கழலேபோற்றி
கோகன்னமேவியகோவேபோற்றி
கூற்றுதைத்தகூற்றனேபோற்றிபோற்றி. (உ)

மந்திரமுமறைநான்குமானாய்போற்றி
மாபூதந்தானாகிநின்றாய்போற்றி
தந்திரமுஞ்சகலகலையானாய்போற்றி
சங்கரியாள்மகிழ்ந்திலங்குந்தலைவாபோற்றி
சுந்திருவர்கணநாதரானாய்போற்றி
கடவூர்வீரட்டக்கண்ணேபோற்றி

யெச்சிரமுமெழுந்துகளுமானாய்போற்றி
யேமனையன் றுதைத்தவனேபோற்றிபோற்றி. (௩)

சந்திரனுஞ்சலமகளுந் தரித்தாய்போற்றி
சலந்தரனைச்சங்கரித்ததலைவாபோற்றி
சுந்தரனாய்ச்சுந்தரற்குத்தோழாபோற்றி
சுடுகாட்டிலாடுகின்றதுணைவாபோற்றி
பந்தனைவுமெந்தாயார்காணவங்கே
பணிவார்சுட்காரமுதேபரமாபோற்றி
கந்தனொடுதந்திமுகன்றாதாபோற்றி
காலனையன்றுதைத்தவனேபோற்றிபோற்றி. (௪)

நண்ணிநின்றுபரவுவார்நாதாபோற்றி
நானாகிநின்றிலங்குநம்பாபோற்றி
சுண்ணவெண்ணீறணிந்திலங்குசோதிபோற்றி
சுருதிமறைக்கெட்டாததுணைவாபோற்றி
கண்ணினுளொளியானமணியேபோற்றி
கடவூர்வீரட்டக்கடலேபோற்றி
யெண்ணிநின்றுருகுவார்க்கெளியோனாகி
யேமனையன்றுதைத்தவனேபோற்றிபோற்றி. (௫)

அடைவார்கட்கருள்கொடுக்குமாதிபோற்றி
யாலங்காடமர்ந்துறையுமரசேபோற்றி
விடையேறிவெண்மழுமான் றரித்தாய்போற்றி
வெண்காடுவேதிகுடிவிகிர்தாபோற்றி
கடையேனையாண்டருளுங்குருவேபோற்றி
கடவூர்வீரட்டக்கடலேபோற்றி
அடையார்புரமூன்றுமெரித்தாய்போற்றி
யந்தகனைக்காய்ந்தவனேபோற்றிபோற்றி. (௬)

மட்டுவார்குழலுமையாள்மணாளாபோற்றி
　　மருதூரிடங்கொண்டமன்னாபோற்றி
யிட்டமாயேறுகந்தயிறைவாபோற்றி
　　யேந்தாதார்புரமெரித்தயீசாபோற்றி
கட்டங்கமேந்தியகையாபோற்றி
　　கடவூர்வீரட்டக்கண்ணேபோற்றி
யட்டமூர்த்தியாயிருந்தாய்போற்றி
　　யந்தகனைக்காய்ந்தவனேபோற்றிபோற்றி. (௭)

செய்யனேசிவபுரத்துச்செல்வாபோற்றி
　　செங்காட்டங்குடிமேயசிவமேபோற்றி
வெய்யனைவெண்மழுமானேந்திபோற்றி
　　வெட்டவெளிதனிலாடும்விமலாபோற்றி
ஐயனுங்காமனைக்காய்ந்தாய்போற்றி
　　கடவூர்வீரட்டக்கடலேபோற்றி
பையனேயாவடுதண்டுறையாய்போற்றி
　　யந்தகனைக்காய்ந்தவனேபோற்றிபோற்றி. (அ)

உடையிடையிலுழுவைத்தோலணிந்தாய்போற்றி
　　யொருவனாயுலகேத்தநின்றாய்போற்றி
சடையிலோர்பெண்ணாகம்வைத்துகந்து
　　சலமாகக்கடலெங்குமானாய்போற்றி
யிடையிலோர்பெண்ணைவைத்துமழுமானேந்தி
　　யேழுலகுமலைகளாயிருந்தாய்போற்றி
கடையனேனுய்யக்கொள்வாய்போற்றி
　　காலனையன்றுதைத்தவனேபோற்றிபோற்றி. (௯)

பேரூர்பேராவூர்ப்பெம்மான்போற்றி
　　பிரமபுரம்பெருந்துறைப்பெரியோய்போற்றி

சீரார்திருவையாறமர்ந்தாய்போற்றி
திருவேளூர்மேவியசிவமேபோற்றி
காரார்கழுக்குன்றிற்குருவேபோற்றி
கடலூர்வீரட்டச்சிவமேபோற்றி
யேரார்முப்புரமெரித்தயீசாபோற்றி
யேமனையன்றுதைத்தவனேபோற்றிபோற்றி. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேகம்பம் போற்றித்திருத்தாண்டகம்.

—:o:—

திருச்சிற்றம்பலம்.

வானவனேவானவர்கண்முதல்வாபோற்றி
மதிசூடும்பெருமானேமறையோய்போற்றி
தானவனேதத்துவங்கள்கடந்தாய்போற்றி
தரணியெங்குநிறைந்திலங்குந்தலைவாபோற்றி
யேனமதாய்முலையருத்துமிறைவாபோற்றி
யேகம்பமேவியிருந்தாய்போற்றி
தேனவனேதித்திக்குஞ்சிவமேபோற்றி
சிறியனேன்வந்தடைந்தேன்போற்றிபோற்றி. (க)

மூன்றுசுடர்க்கண்ணனேமூர்த்திபோற்றி
மூவிலைவேற்கையானேமுதல்வாபோற்றி
சான்றோர்கடொழுதேத்துந்தலைவாபோற்றி
தக்கனிட்டவேள்விதகர்த்தாய்போற்றி
தோன்றுமற்றொன்றுமோர்பொருளேபோற்றி
தொண்டர்கட்குணிறைந்திலங்குசோதிபோற்றி
நான்றனாய்த்தனித்தபரம்பொருளேபோற்றி
தமியனேன்வந்தடைந்தேன்போற்றிபோற்றி. (உ)

முப்புரத்தையெரித்தவனேமுதல்வாபோற்றி
முக்கணனேமுழுமுதலேமூர்த்திபோற்றி
அப்பனுமாயம்மையுமாயமர்ந்தாய்போற்றி
யாலங்காடமர்ந்துறையுமாதிபோற்றி
செப்பரியமுப்பொருளேசெல்வாபோற்றி
திருக்கச்சியேகம்பச்சிவமேபோற்றி
தற்பரமாய்த்தானுகிநின்ருய்போற்றி
தமியனேன்வந்தடைந்தேன்போற்றிபோற்றி. (௧)

ஏழுலகுமலையுமாய்நின்ருய்போற்றி
யெங்கெங்குநிறைந்திலங்குமீசாபோற்றி
சூழ்வினையென்வல்வினைகடீர்ப்பாய்போற்றி
தொண்டர்கள்கொண்டாடுஞ்சோதிபோற்றி
பாழ்குழியிற்பிறவாமலாள்வாய்போற்றி
பலர்காணுக்கச்சியேகம்பாபோற்றி
வேழமுகன்வேலவனுர்பாதம்போற்றி
வினையனேன்வந்தடைந்தேன்போற்றிபோற்றி. (௪)

பன்னியசெந்தமிழறியேன்பரமாபோற்றி
பத்தர்கள்கொண்டாடும்பாதாபோற்றி
அன்னையுமைமகிழ்ந்திலங்குமையாபோற்றி
யடைந்தார்கள்வினைதீர்க்குமப்பாபோற்றி
சென்னிமதிமலர்சூடுந்தேவேபோற்றி
திருக்கச்சியேகம்பச்சிவமேபோற்றி
தன்னந்தனிமுதலேதவமேபோற்றி
தமியனேன்வந்தடைந்தேன்போற்றிபோற்றி. (௫)

விண்ணவர்கடொழுதேத்தும்வேதாபோற்றி
வித்துக்குள்வித்தானவிளைவேபோற்றி

பெண்ணவனேயாணவனேபெரியோய்போற்றி
பெருந்தக்கன்வேள்விதகர்த்தாய்போற்றி
கண்ணுக்குட்கண்ணானமணியேபோற்றி
கரைகாணுக்கச்சியேகம்பாபோற்றி
எண்ணுக்குளெழுத்தானவொளியேபோற்றி
ஏழையென்வந்தடைந்தேன்போற்றிபோற்றி. (௬)

தலையேந்துங்கையானேதலைவாபோற்றி
தக்கனுடதலையறுத்ததனியேபோற்றி
மலைமகளையிடப்பாகம்வைத்தாய்போற்றி
மதகரித்தோலுரித்தணிந்தமன்னாபோற்றி
கலைமான்மறியேந்துங்கையாபோற்றி
கரைகாணுக்கச்சியேகம்பாபோற்றி
அலையாமலாதரித்தாட்கொள்வாய்போற்றி
யடியனேன்வந்தடைந்தேன்போற்றிபோற்றி. (௭)

தொண்டர்கள்கொண்டாடுந்துணைவாபோற்றி
சுடர்மழுவாட்படையானேசோதிபோற்றி
பண்டையுளபொருளானேபரனேபோற்றி
பகலவனைப்பல்லுதிர்த்தபாதாபோற்றி
யெண்டிசையுமெங்குமாய்நிறைந்தாய்போற்றி
யேகம்பமேவியசிவமேபோற்றி
அண்டமெலாநிறைந்தாமோதிபோற்றி
யடியனேன்வந்தடைந்தேன்போற்றிபோற்றி (அ)

நாரணனுன்முகன்காணாநாதாபோற்றி
நான்மறையின்முடிவானநம்பாபோற்றி
பாரிடங்கள்பலசமயமானாய்போற்றி
பராபரியாள்கொண்டாடும்பாதாபோற்றி

கார்மேகமழையுமாய்நிறைந்தாய்போற்றி
கரைகாணுக்கச்சியேகம்பாபோற்றி
சீர்புகழுந்தில்லைநகர்ச்செல்வாபோற்றி
சிறியனேன்வந்தடைந்தேன்போற்றிபோற்றி. (௯)

நெருப்புருவத்திருமேனியுடையாய்போற்றி
நினைப்பார்கணினைவுளிருப்பாய்போற்றி
பொருப்பவனேபூரணனேபுனிதாபோற்றி
புரந்தரன்மாதேவர்தொழும்போதாபோற்றி
கருப்பவரைகடந்துநின்றகாலாபோற்றி
கரைகாணுக்கச்சியேகம்பாபோற்றி
அருப்புமலர்முடிசூடுமாதிபோற்றி
யடியனேன்வந்தடைந்தேன்போற்றிபோற்றி. (௧0)

மௌனசுவாமிகள்திருவருட்பா முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தண்டபாணிமாலை.



தந்திமாமுகவன்சரணடிபரவித்
தரணியிற்பவவினைநீக்கிக்
கந்தவேண்முருகர்வடிவதாய்வந்த
கழலடிகண்டவர்தங்கள்
சொந்தமாமணியேசோதியேசுடரே
தொண்டர்களுள்ளத்தில்விளையுஞ்
சிந்தைமாமணியேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (க)

அருட்பெருங்கடலேயருளுடைச்சுடரே
யண்ணலார்க்கரும்பொருளுரைத்த
பொருட்பெருங்கடலேபோதமெஞ்ஞான
புண்ணியாநிதமுநாயடியே
னிருட்பெருங்கடலிலேகிடாவண்ண
மெந்தைநீகாத்தருள்புரிவாய்
திருப்பரங்கிரியாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (உ)

அந்தியும்பகலுன்னடியிணைபரவி
யறுமுகவென்றுநாயடியேன்
சிந்தைநைந்துருகித்திருவருள்பெருகி
சேருநாளெந்தநாளுரையாய்

எந்தனைக்கவர்ந் தன்னிதயத்திற்சேர்த்து
　　மிருவருமேகமதாகிச்
செந்தினிலமர்த்திருவடியடைந்தேன்
　　செல்வமேதண்டபாணியனே. (௩)

ஆவியோடாக்கையடைக்கலம்வைத்துன்
　　னடியிணைபரவியவென்னைத்
தாவிரீவந்துதற்பதமளித்தாய்
　　சற்குருமணியெனும்பொருளே
யாவினன்குடியிலமர்ந்தசெஞ்சுடரே
　　யப்பனேயொப்பிலாமணியே
சேவிக்கும்பணிகள்செய்வகைகாணேன்
　　செல்வமேதண்டபாணியனே. (௪)

அத்தனர்பாலாவறுமுகப்பொருளே
　　வாண்டவாவென்றநானுன்னைப்
பத்தியாய்நெறியிற்றனிந்துளமுருகிப்
　　பரவுநாளெந்தநாளையா
யுத்தியாயுன்னையடைந்தவர்தங்கட்
　　கொருமொழியுரைத்தநற்சோதி
தித்திக்குஞ்சிவமேயேரகத்தமர்ந்த
　　செல்வமேதண்டபாணியனே. (௫)

சென்றுநீராடிச்சிவனடிதொழுது
　　திருமுருகையவென்றருக
மன்றுணீராமெலரடிதாக்கி
　　மௌனத்தின்முடிவருள்காட்டிக்
குன்றுதோறாடுங்குமரசற்குருவே
　　கொடியனேன்கொடுவினையகலத்

சென்றாரிருடீஞ்செழுமணிக்குன்றே
செல்வமேதண்டபாணியனே. (௬)

ஞாலமதண்டநாரணன்மருகா
ஞானத்தின்முதற்பொருளாகிக்
கோலமாயிருந்தகுமரசற்குருவே
குணத்தினின்விளையுஞ்செங்கனியே
சோலைமாமலையிற்சோதியாய்நின்ற
துரியமேதொண்டர்கட்கினிய
சீலமேசிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௭)

அட்டநாயகனருளியவேலா
வைம்புலவேடர்கடன்னை
வெட்டிநீயென்னுள்வீடதாயிருப்பாய்
வினையிருள்கருகவந்தருளிக்
கட்டியிம்மனதைக்கதியருள்தருவாய்
கத்தனேகருணையங்கடலே
திட்டமாய்நின்றன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௮)

அப்பனேயரசேயவுணர்வேரறுத்த
வாண்டவாவளவிலாவருளோய்
முப்பொருண்மணியேமோனமெய்வாழ்வே
முதிர்ந்தநற்பழம்பொருட்சோதி
யெப்பொருட்கிறைவரீன்றநற்பாலா
வெளியனேன்பவவினையகலச்
செப்பிவந்துன்றன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே, (௯)

ஓதுமெய்யடியாருளந்தனிற்குடியா
யொற்றைநற்கொம்பனுக்கிளைய
நாதனேஞானமௌனசற்குருவே
ஞானியர்நாட்டத்துளிருந்த
போதநாயகனேபுகலிடங்காணேன்
புண்ணியாநின்னடைக்கலமாய்த்
தீதிலாச்சிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௧0)

பருவமாமங்கைபாலருந்தியபாலா
பாருலகனைத்துமாயெங்கு
மொருவனாயிருந்தவுத்தமன்சேயே
யுன்னருள்பெருநாளுளதோ
மருளுநாயடியேன்மனத்திருளகற்றி
மலமெலாநீக்குவாயெந்தாய்
திருவருள்வேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௧௧)

அல்லலையகற்றுமற்புதச்சுடரோ
யடைந்தவர்தங்கடம்வினையின்
றொல்லையையகற்றுஞ்சோதிமாமணியே
துரியமோடதீதமாய்நின்ற
வல்லவாவடிவேல்மௌனசற்குருவே
வறியனேன்வல்வினையகலத்
தில்லைமாமணியேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௧௨)

உத்தமவடியார்பெற்றமெய்வாழ்வி
லுத்தையேன்சேருநாளுளதோ

வெற்றிசையெங்குநிறைந்தநற்சோதி
யேகயேயோகநாயகமே
முத்திக்குமுதல்வாமுருகசற்குருவே
யோனத்தின்முதற்பொருளான
சித்தனேசிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௧௩)

ஓடுமாமனதையொடுக்கவல்லவனே
யுணர்வுக்குணற்கனியமுதாய்க்
கூடுமெய்யடியார்குணப்பொருங்குன்றே
கொடியனேன்வல்வினையகலச்
சாடுமயூராசரஹணபவனே
தரணியாய்நின்றசற்குருவே
தேடியேநின்றன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௧௪)

அற்புதக்கனியேயமிர்தசஞ்சீவி
யாவிக்கோர்துணையதாயமர்ந்த
பொற்பதப்பொருளேபுகல்வதற்கரிய
போகமேஞானபூரணனேய்த்
தற்பதப்பொருளேதமிழ்முனிகுருவே
சாத்திரமுடிவதாயிருந்த
சிற்சபைப்பொருளேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௧௫)

எப்பொழுதுன்னையடைவனோயே
னினியொருகாரியம்பாரோ
னப்பனேயெங்களாறுமுகப்பொருளே
யறிவினின்விளையுநற்கனியே

துப்பறவாகத்தொம்பதநீக்கிச்
சொல்லொணுவசிபதஞ்சேர்த்து
செப்பியேபெற்றாய்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (கசு)

தத்துவமுடிவினின்றநற்சோதி
சண்முகாசமயங்கடோறும்
பத்தியேநின்றுய்ப்பலதெய்வமாகிப்
பகரொணுப்பரமசற்குருவே
யெத்திசையெங்குநிறைந்தநற்பொருளே
யெளியனேன்பவவினையகற்றித்
தித்திக்குஞ்சிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (கஎ)

பலபலதுயரம்பற்பலயோனி
பாவியேன்பிறந்திறந்துழன்று
குலம்பலகோடிகோத்திரங்கோடி
கூறவோர்கணக்கறுங்காணே
னிலையிலாவாழ்க்கைநீரின்மேற்குமிழி
னிந்தனுமலேந்திடாவண்ணஞ்
சிலைவடிவேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (கஅ)

வந்தையாமுடலேநம்பிநாயடியே
னுன்னையேமறந்தநானித்தம்
முத்திரக்குழியைமுத்தியென்றெண்ணி
மும்மலச்சேற்றினின்மூழ்கிச்
சுத்திரத்தன்மையறிந்திடாவெனக்குத்
துணையதாந்துரியமேகாட்டிச்

சேர்த்திடநின் றன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௧௯)

ஊத்தையைத்திரட்டியுடலெனவமைத்து
வொன்பதுவோட்டையைவைத்துச்
சோத்தினைநிரப்புந்தொம்பையாமுடலைச்
சுமப்பதற்கிரண்டுகொளுட்டிப்
பித்தத்தோற்றுருந்திபேய்ச்சுரைத்தோட்டம்
பேதையேன்விட்டிதைநீத்துச்
சேர்த்திடநின் றன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௨0)

கழுகுநாய்நரிகள்கத்தியேதின்னுங்
கசியுமோர்காற்றபாண்டத்துள்
ஒழுகிடவழிகளொன்பதுலவத்தாய்
யோனியென்றொருவழிக்குழியிற்
கழுதையாம்புலன்களுழன்றிடாவண்ணங்
கத்தனேகருணைதந்தாளாய்
தொழுதுநானுன் றன்றிருவடியடைந்தேன்
சோதியேதண்டபாணியனே. (௨௧)

காக்கையுங்கழுகுங்கத்திடுநரிகள்
கருதியேதின்னுமாமிசத்
வாக்கையைநீத்துன்னருள்வழிகண்டே
யடையுநாளெந்தநாளுரையாய்
போக்கிநான்வீணேகாலங்கள்கழித்துப்
புலன்வழியலைந்திடாவண்ணந்
தேக்கியேயெந்தாய்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௨௨)

ஊனமாம்யோனியிலுடலெடுத்தடியே
னாழ்வினைக்கடலினின்மூழ்கி
ஞானமாமோனவாழ்வதைமறந்து
நங்கைமார்கொங்கையைநோக்கி
யீனமாம்வாழ்விலேகிடாவண்ண
மென்னைநீதடுத்தருள்புரியாய்
தேனினுமினியதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௨௩)

பொய்யதாமிந்தப்புவியினின்வாழ்க்கை
பொருந்திடுஞ்சந்தையின்கூட்டம்
மையணிமாதர்மையலில்மயங்கி
மாயையாமிருட்கடன்மூழ்கிக்
கையனார்க்காளாய்க்கலங்கிடாவண்ணங்
கத்தனேகருணைதந்தாளாய்
செய்யனேசிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௨௪)

மனவிலங்கதனுன்மாநிலந்தன்னின்
மங்கைமார்சுற்றமென்றெண்ணிக்
கனவுபோலழியுங்காரணங்காணாக்
கள்வனேனுன்னருள்பெருகக்
கனிந்துளமுருகிக்கருவிகணீத்துக்
கண்டுனைச்சேருநாளுளதோ
தனிவடிவேலாதாளினிலடைந்தேன்
சண்முகாதண்டபாணியனே. (௨௫)

ஒருதனிவழியேசெல்கின்றகாலை
யுறுதுணைகூடுவோர்போல

மருமலர்சூடிமங்கையைமணந்து
மைந்தருஞ்சுற்றமாய்க்கூடிக்
கருமுகிற்காலன்வருகின்றகாலை
கலங்குமிவ்வாழ்க்கையைவிட்டுத்
திருவருள்வேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௨௬)

சொப்பனமிந்தத்தொல்புவிவாழ்க்கை
தோன்றுநீர்க்குமிழியைப்போல
வெப்பொழுதிருந்துவாழ்வமென்றெண்ணி
யிவ்வுடற்புலன்வழிசென்று
மைப்படிமகளிர்கொங்கையில்வீழு
மலங்களோர்மூன்றையுநீத்துச்
செப்பிவந்துன்றன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௨௭)

இல்லறமேன்மையெனமறைபேசு
மேந்திழையருந்ததிபோலச்
சொல்லறந்தவறுத்தோகையர்வாழ்வே
சுருதிநான்மறைமுடிவாழ்வாம்
மல்லர்போற்பேசுமங்கையர்வாழ்வு
மறலிதன்றூதவொன்றெண்ணித்
தில்லையுனின்றதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௨௮)

பணமதுமிகுந்தாற்பாதத்தில்வீழ்வர்
பாருளமங்கையர்நடக்கை
குணமதுகுறைவாங்கொடும்பலைசவிளையுங்
கோதைமாரொன்றோ பூமி

யிணைவதைநீத்தேயறுமுகவேலா
வாண்டவாவென்றுநாடோறுந்
தணிகைமாமலையாய்தாளின்வந்தடைந்தேன்
சண்முகாதண்டபாணியனே. (௨௯)

பஞ்சடிபடுவதோர்பாடலவிந்தப்
பாமுடலெடுத்தானெல்லாஞ்
சஞ்சலர்துன்பஞ்சமைந்தபொய்வாழ்விற்
றயங்கியேயுழன்றலையாம
லஞ்சலென்றருளியடியனைக்கவர்ந்துன்
னருள்வழிநக்தருளையா
செஞ்சுடர்வேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௩0)

இருவினைச்சுழலிலேகிடாவண்ண
மெந்தைநீதடுத்தருள்புரிந்து
வுருவமாமுடலையுனதெனதென்று
முழ்வினைமுழ்கிடாதடியேன்
சருவமுஞ்சிவமாயிடையறுதெண்ணித்
தவம்புரிந்தொழுகுநாளுளதோ
திருவருள்பெருகத்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௩௧)

ஒடுநீர்க்குமிழியுப்பிட்டபாண்ட
முளுத்தபைப்புழுத்தபொய்க்கூட்டி
லாடும்பரம்போலைம்புலப்பறவை
யதிலிருந்தாணவஞ்செலுத்தக்
காடதுவிளையுங்காலன்வந்தறுக்கக்
கலங்குமிவ்வாழ்க்கையைவிட்டுச்

சாமியூரா தாளின்வந்தடைந்தேன்
சண்முகாதண்டபாணியனே. (௩௨)

தந்தைதாய்சுற்றஞ்சந்தையின்கூட்டந்
தருமனார்வெட்டுபொய்க்கட்டை
சொந்தமென்றெண்ணித்துர்த்தனாயடியேன்
றொல்புவியோனிகடோறும்
பந்தமாய்ப்பிறந்துபாதகர்க்காளாய்ப்
பரதவித்துழன்றலையாமற்
சிந்தைமாமணியேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௩௩)

பூமியிலென்றன்றாய்தந்தையெண்ணிற்
பொருந்தியபெருங்கடன்மணல்போற்
காமியமெழுவுடற்பிறப்பதையெண்ணிற்
கலங்குதேநெஞ்சமுமந்தோ
வோமெனும்பொருளாலுனையறிந்துணர
வுத்தமாவுவந்தருள்புரியாய்
சாமியேசிவமேதாளின்வந்தடைந்தேன்
சண்முகாதண்டபாணியனே. (௩௪)

மங்கையராகிமைந்தர்களாகி
மாநிலமுதித்தநாடோறு
மெங்குமாய்ப்பிறந்திறந்தநாளெண்ணி
லேங்குதேநெஞ்சமுமையோ
தங்கவேற்குமராசண்முகத்தரசே
தமியனேனுழன்றலையாமற்
செங்கனிவாயாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௩௫)

பட்டநாளெல்லாம்பகரவோவென்றூற்
        பதைக்குதேநெஞ்சமுமந்தோ
வொட்டுமோவுள்ளமோம்சிவவென்றே
        யுருகுநாளெந்நாளுரையாய்
விட்டொருன்னைப்பிரிவனோவெந்தாய்
        வினையனேன்பிறவிநோய்விலக்குஞ்
சிட்டனேசிவமேதிருவடியடைந்தேன்
        செல்வமேதண்டபாணியனே. (௫௬)

தூக்கமும்வருமோதொல்வினைநினைந்தாற்
        சோதியேயாதியின்மைந்தா
வேக்கமுற்றந்தோயிருவினைக்கயிற்று
        லெவ்வுயிர்யோனிகடோறு
நோக்கிடாவண்ணந்தாக்கிநின்பாத
        நொடிதனிலென்றனைக்காக்கத்
தேக்கியேநின்றன்றிருவடியடைந்தேன்
        செல்வமேதண்டபாணியனே. (௫௭)

புன்புலால்யாக்கைபொய்புடற்கூட்டிற்
        பொருந்தியபுலன்மனநீத்துத்
துன்பமாமிந்தத்தொல்புவிவாழ்விற்
        றுண்டனேனுழன்றிடாவண்ண
மன்பினாலெந்தாயகங்குழைந்துருகி
        யநுதினமுன்னையேபரவித்
தின்பதற்கினியதிருவடியடைந்தேன்
        செல்வமேதண்டபாணியனே. (௫௮)

எப்பிறப்பதைநானெடுத்தபோதெல்லா
        மெந்தையேநின்னையேபோற்றி

யிப்புவியதனிலிடையறுநரக
வெங்ஙதைநீகிருபைதந்தாளாய்
தப்பிதஞ்செய்யும்புலன்களைநீந்துத்
தத்துவமுடிவதைக்காட்டிச்
செப்புவாயென்றன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௩௯)

ஒருதலையிழந்தநான்முகன்றன்னை
யுடற்சிறைவைத்தவர்நாளிற்
றிரமிலாநாயேன்சனனமீடேறத்
தேவநீசெப்பவுமிலையோ
வருவுருவானவறுமுகப்பொருளே
யல்லலையகற்றுநற்குருவே
திருவருள்வேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௪0)

அருமறைப்பொருளாமாண்டவர்தமக்கு
மன்றிருந்தரும்பொருளோதிக்
குருமுனிதன்பாற்பொதிகைநீயேகக்
குளந்தைவாவென்றவர்கூவத்
திருநகைகாட்டித்திருவடிசூட்டித்
திருத்தியாண்டவளையாட்கொண்டாய்
திருமறைவேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௪௧)

குறுமுனிதனையாட்கொண்டவந்நாளிற்
கொடியனேன்பிறவிதானேதோ
பிறவியைவினைந்தாற்பதைக்குதேநெஞ்ச
மிறப்பதுபெரியவெந்தியா

மறுமுகப்பொருளேயாண்டவாவடியா
ரல்லலைக்களைந்தருள்புரியாய்
சிறுவனுமடியேன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௪௨)

மாடுநண்பூமிமங்கையர்வாழ்வின்
மாயைகொண்டுழன்றலையாமற்
சாடிவந்தென்னையாண்டசற்குருவே
தமியனேன்செய்பணிகாணே
னூடிநாடோறுனைந்துளமுருகி
நாதனேநின்னருள்பெருகத்
தேடிவந்துன்றன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௪௩)

பானினைந்தூட்டுந்தாயினுஞ்சாலப்
பழனிவேன்முருகசற்குருவே
யூனினையுருக்கியுள்ளொளிபெருக்கி
யுனதருள்கூட்டுநாளுளதோ
நானெனுஞ்செருக்கிலுழன்றிடாவண்ண
நாதனேமோனத்தின்முடிவாந்
தேனினுமினியதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௪௪)

அறிவினின்விளையுமறுமுகப்பொருளே
யாண்டவாவகங்குழைந்துருகி
நறுமலர்சூடிநாடொறும்பரவி
ஞானியர்வாழுமெய்ப்பூமி
யுறுவனாகடந்தேயப்புறத்தேறி
யகண்டமாயருளதுபெருகச்

சிறுவனையடியேன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௬௫)

இந்திரனயன்மாலிவர்கடம்வாழ்வி
லிம்மனமேகிடாவண்ண
மந்தமுமுடிவுமளவிடாவாழ்வி
லங்கனேகலந்திடவருளா
யிந்தவிண்ணப்பமெந்தைநீகேட்டென்
னிருவினையகற்றிடுமெந்தாய்
சிந்தைமாமணியேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௬௬)

பொன்னருள்சேர்ந்துபுலன்மனசித்துப்
பூரணமாகுநாளென்றோ
தன்னுருக்காட்டித்தாளிணைசூட்டாய்
சரணியாய்நின்றசற்குருவே
யன்னையோடப்பனெனமெய்வாழ்வே
யவனியிற்பெரும்புகழ்படைத்த
சென்னியங்கிரியாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௬௭)

எங்குமாய்நிறைந்தசெங்கனிப்பழத்தை
யிடையறாதடியனேன்தின்று
பொங்கியேயுள்ளம்பூரணமாகிப்
பொய்யுடற்புலன்பசிதீர்த்துத்
தங்கவேண்முருகாசண்முகத்தரசே
தற்பராநின்னருள்பெருகச்
செங்கனிவாயாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௬௮)

எத்திசையெங்குநிறைந்தநற்பழத்தை
யிடையருதேழையேன்றின்று
பொந்தையாமுடலிற்பொருந்துமிப்பசியைப்
புண்ணியாபோக்குநாளுளதோ
அத்தனாரீன்றவறுமுகப்பொருளே
யப்பனேநின்னருள்பெருகச்
சித்தனேயரசேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௪௯)

வறுமையாலலைந்துபிணியினான்மெலிந்து
வஞ்சகப்புலன்வழிசென்று
சிறுமுலைமாதர்வலையினுட்பட்டுச்
சிதைந்துநாளுழன்றிடாவண்ணம்
மறிவினின்விளையுமறுமுகப்பொருளே
யப்பனேசெப்பொனாச்சோதி
சிறுவனாயடியேன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௫௦)

அச்சத்தைவிலக்குமருந்தவப்பொருளே
யசுரர்வேரறுத்தநற்சுடரோ
கச்சணிமுலையார்காதலைநீக்கிக்
கண்டுனைக்கலருநாளுளதோ
நச்சிநாயடியேனைந்துளமுருகி
ஞானத்தின்முதற்பொருள்சேரச்
சிற்சிவமணியேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௫௧)

உலைமெழுகதுபோலுளங்குழைந்துருகி
யுனதருள்பெறுவதெந்நாளோ

அலைமனதடக்கியகண்டத்திற்கலந்துமெய்
யருள்பெறுமடியவர்பெருமை
புலையனேன்புகலமுடியுமோவெந்தாய்
பூரணானந்தசற்குருவே
சிலைவடிவேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௫௨)

அகங்குழைந்தடியேனருண்மிகப்பெருக
வரசராவென்றுநாடோறு
மிகபரநீத்துமிருவினைநீத்து
மெந்தையேயிறைவவென்றேத்திப்
பகையதாம்பிறவிப்பவக்கடல்கடந்து
பரகதிசேருநாளுளதோ
செகமதாய்நின்றதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௫௩)

காரணமாகக்கந்தனார்வடிவாய்க்
கடவுளர்திருவுருக்காணு
நாரணனுதிநான்முகனோர்க்கும்
ஞானத்தின்மோனசற்குருவாய்ப்
பூரணமாகநிறைந்தநற்சோதி
புண்ணியாபுலையனேன்பிறவி
சீரணமாகத்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௫௪)

அண்ணலாரீன்றவறுமுகத்தரசே
யப்பனேயொப்பிலாமணியே
நண்ணிநாயடியேனுடொறும்பரவி
ஞானத்தின்முடிவதுகாணக்

கண்ணினீர்பெருகிக்கசிந்துளமுருகிக்
கண்டுனைச்சேருநாளுளதோ
திண்ணமாயுன்றன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௫௫)

தப்பெலாம்பொறுத்தேதமியனைக்காப்பாய்
தவத்தினிற்கினியமெஞ்ஞான
வொப்பிலாமணியேயோம்சிவப்பொருளே
யுள்ளத்தில்விளையுஞ்செங்கனியே
முப்பொருட்சுடரேமூவுடனிந்தேன்
முருகநின்னடைக்கலமாகிச்
செப்பியேயடியேன்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௫௬)

ஒருபொருளாகியுலகெலாநிறைந்தா
யோதிடுமெடியவர்தங்கள்
குருவுருவானசரஹணபவனே
கோதிலாக்குணப்பெருங்குன்றே
கருதிநாயடியேன்கசிந்துளமுருகிக்
கண்டருள்பெருகுநாளுளதோ
திருவருள்வேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௫௭)

எங்களுக்கிறைவாவினியநற்சுடரே
யேகமேயோகநாயகமே
அங்கயற்கண்ணிபாலருந்தியவேலா
வடியனேற்கருண்மிகப்பெருகப்
பொங்கியுள்ளுருகிப்பூரணமாகிப்
பொருந்துநாளெந்தநாளுரையாய்

தங்கவேற்குமராதாளினிலடைந்தேன்
சண்முகாதண்டபாணியனே. (௫௮)

கமலநான்முகனீகரியமால்தேவர்நீ
கடவுளர்க்கோம்பொருளுரைத்த
விமலனேவேலாசெவ்வினையகற்ற
வெங்குருவதனில்வந்துதித்துச்
சமணரையழித்தாய்சைவமேதழைக்கத்
தமியனேன்பவவினைநீங்கத்
திமலநான்மறைசேர்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௫௯)

வேயுறுதோழிபாலனாய்வந்து
விண்ணவரிடர்களைத்தேற்றி
யாயிரவெட்டாயண்டமுமாண்ட
வவுணர்வேரறுத்தசற்குருவே
நாயினேனுய்யும்வழியதுகாட்டாய்
ஞானியர்நாட்டத்துளிருந்த
தாயினுமினியதிருவடியடைந்தேன்
சண்முகாதண்டபாணியனே. (௬௦)

இருப்புநெஞ்சுடையவீநாயடியே
னிடையறாதிறைஞ்சினைந்தேத்தி
நெருப்பிலேவைத்தமெழுகதுபோல
நெக்குநெக்குருகிநாடோறும்
விருப்பமாயுன்னையுள்கவந்தருளாய்
வெவ்வினைப்பிறவிநோய்நீங்கத்
திருப்பரங்கிரியாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௬௧)

இந்தவெம்பிறவிபகலுமோவெந்தா
யின்பமாய்நின்னருளல்லாற்
சொந்தமாயெண்ணித்தோலுடல்தன்னை
யோனிவாய்க்குழியினிற்றோய்ந்து
பந்தமாந்துன்பத்தழுந்துவரந்தோ
பரகதிக்குண்மைநீயென்று
செந்திலின்வளருந்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௬௨.)

பாவித்துப்பழநியங்கிரிதனைப்போற்றும்
பத்தர்கள்பாதமேயிறைஞ்சி
யாவினுக்குடியிருனமருனாருளதோ
வப்பனேசெப்பொருச்சோதி
மூவுருவொன்றாய்நின்றசற்குருவே
மும்மலமறக்குமெய்ப்பொருளாத்
தேவர்கடேவேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௬௩)

ஏரகத்துள்ளேவொன்றெனவெல்லா
வுலகமுநீயெனவேத்தத்
தாரகப்பொருளாயமர்ந்தசற்குருவே
தந்தைக்குமெய்ப்பொருளோதிப்
பேரகப்பெரியோருளங்குடியானாய்
பேதையேன்பவவினைநீங்க
வேரகந்தமர்ந்ததிருவடியடைந்தே
னெந்தையேதண்டபாணியனே. (௬௪)

என்றுநின்றேத்தவிருக்குமோமாயை
யிவ்வுடம்கருவிகளீத்துக்

குன்றுதோறாடுங்குமாரனென்றருகக்
கூடுறுமூர்த்தியமேதோன்றி
மன்றுணின்றாடும்மலரடிதாக்கி
மதிப்பதற்கறியொணாமுடிவாய்ச்
சென்றணின்றிலங்குந்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௧௫)

ஆலமுண்டவண்ணலார்பாலா
வவுணர்க்கோர்காலனாயுதித்த
வாலைதன்றனத்தின்பான்மிசையுண்டு
வடிவேலெடுத்தநற்சோதி
சோலைமாமலையேகோயிலாய்நின்றாய்
தொண்டனேன்பவவினையகலச்
சாலவுமுன்றன்றிருவடியடைந்தேன்
சண்முகாதண்டபாணியனே. (௧௬)

வேண்டுவோர்க்கெல்லாவினைகளையகற்றும்
வித்தகாவேதத்தின்முடிவில்
தாண்டவமாடுந்தன்மையப்பொருளே
தாயினுமினியபொன்மேனி
யீண்டுவோரெந்தாய்வள்ளிதெய்வானை
தேவிமார்கலந்தொன்றாய்நின்ற
ஆண்டவாவுன்றன்றிருவடியடைந்தே
னப்பனேதண்டபாணியனே. (௧௭)

ஓலமென்றமரரமுதவன்றுளி
லுதித்துவந்தவுணர்வேரறுக்க
வேலெடுத்தோச்சிவிண்ணவர்மகிழ
விளக்கெனநின்றநற்சோதி

மூலமெய்ப்பொருளேமோனத்தின்முடிவே!
மும்மலநீங்கவென்றெந்தாய்
வேலவாவுன்றன்றிருவடியடைந்தேன்
விமலனேதண்டபாணியனே. (௬௮)

வாட்டமாய்வாடிமெலிந்திடாவண்ணம்
மருவியவடியவர்க்குண்மை
காட்டுவாய்குருதிமுடிமிசைநடஞ்செய்
கத்தனேகருணைதந்தாளாய்
நாட்டமாயுன்றனடைக்கலமையா
நாடொறும்புலன்களுக்கஞ்சித்
தேட்டமாஞ்சிவசிவதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௬௯)

ஐயனேயெங்களறுமுகப்பொருளே
யடியிணைகண்டநற்பெரியோர்
மெய்யடியார்கள்பாதத்தைமேவி
வீணனேன்சேருநாளுளதோ
துய்யசோதியனேதூர்த்தனேனுவித்
துணையதாயமர்ந்தநற்கடோ
செய்யனேசிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௭௦)

எங்கோயடியேனிப்புவியதனி
லெண்ணிலாயோனிகள்புகுந்து
மூங்கைநான்மூடன்மும்மலத்தழுந்தி
மூழ்கியநாளைநினைந்தா
லேங்குதேநெஞ்சமெந்தையேயிறைவா
வேழையேனடைக்கலமாகித்

தேன்கமழினியதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (எக)

தற்பதப்பொருளாய்த்தொம்பதமீத்துத்
தன்மயத்தசிபதஞ்சேர்ந்துப்
பொற்பதப்பொருளாய்ப்பூரணமாகிப்
புண்ணியாநீயுநானொன்றாய்க்
கற்பனைகடந்தசிற்சிவமடைந்து
கண்டங்குவாழுநாளுளதோ
சிற்பரசிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (எஉ)

இரவுடன்பகலுமெத்தொழில்செயினு
மிடையறாதுன்னையேபரவிக்
கருதியுள்ளுருகக்கழலடிபெறுவர்
கடவுளராணையீதுண்மை
யொருதனிப்பொருளேயுக்ரவேன்முருகா
வோம்பொருளானசற்குருவே
திருமணிவேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (எங)

ஞானமதடைந்தானாளொடுகோள்க
ணமணிவையணுவளவில்லை
யீனமாமிந்தவுலகமதில்லை
மெங்கெங்குஞ்சிவமதாய்நிறைந்து
ஞானசற்குருவாய்நாரணனாதி
யாவர்க்குமூலமாய்நின்ற
தேனினுமினியதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (எச)

சகமுளோர்பழிக்கத்தவமதுபெருகுந்
தானெனுமாணவமற்று
முகநகைநீத்துமுருகனென்றேத்த
மும்மலநீங்குமிருண்மை
யகம்பரமாகியறுமுகப்பெருமா
னங்கனேயொருமொழிகாட்டிச்
செகமெலாநிறைந்தசிற்றிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே (௭௫)

மும்மலநீத்துமுவுடலாய்ந்து
முருகையாவென்றநாடோறும்
யிம்மனமொத்துமிகபரநீத்து
மெந்தையேயிறைவவென்றேத்தப்
பொம்மைபோலாட்டப்புவியுளவாழ்க்கை
பொய்யதாய்மனமருள்கூடுஞ்
செம்மணிவேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௭௬)

சாதனநான்குந்தனக்குத்தான்வந்தாம்
சாத்திரமுடிவருள்காணு
மாதிநாயகனோருருவியகுருவே
யறுமுகமுருகவென்றுருகப்
போதமெஞ்ஞானபுண்ணியமென்றன்
பூரணவடிவதைக்காட்டுந்
தீதிலாச்சிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௭௭)

தத்துவமறியார்தரணியிற்பிறந்துஞ்
சலித்திடும்பரவைபுன்விலங்கா

மெத்தவுமேலோர்தத்துவநூலின்
மெய்யதாயிவ்வகைவிளம்பிச்
சத்துவகுணமேமிகுந்தவர்பெரியோர்
தங்களைநாயினேன்போற்றித்
தித்திக்குஞ்சிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (எஅ)

சுருதிநூன்முடிவாய்நான்மறைப்பொருளாய்ச்
சோதியாஞ்சுடரொளிக்குன்றே
கருதிநாடோறுங்கசிந்துளமுருகிக்
கண்டுகொண்டுன்னருள்பெருகப்
பொருதுவாயரசேபுண்ணியாமுருகா
புலன்மனமொடுக்கிநீயென்ற
னிருதயங்குடியாயிருந்தருட்குருவா
யெந்தையேதண்டபாணியனே. (எகூ)

மூன்றெனுமவத்தைகடந்துநாயடியேன்
முருகையாவென்றுனைத்தனியே
தோன்றுவாயென்னுட்சோதியேதுணைவா
துரியமோடதீதமாய்த்தோன்றி
யூன்றவாயரசேயூழ்வினையகல
வொப்பிலாவுக்ரவேற்குமரா
சான்றுநின்னருளாற்றிருவடியடைந்தேன்
சண்முகாதண்டபாணியனே. (அ0)

நான்செனுமவத்தைகடந்துநாயடியே
னான்மறைமுடிவருள்கண்டு
வான்பொறியகற்றியுளங்குழைந்துருகி
வுனதருள்பெருகுநாளுளதோ

மான்மழுவேந்தும்வள்ளலார்பாலா
மனதுவைத்தென்னைநீயாளத்
தேன்கரும்பினியதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௮௧)

ஆசைக்குண்மிகுந்தவற்புதக்கனியே
யல்லலையகற்றநற்சுடராய்ப்
பூசைக்குண்மிகுந்தபுண்ணியாமுருகா
புலன்மனமொன்றதாயொடுக்கிப்
பூசித்துநாயேனுன்னையேபோற்றிப்
பூரணமாகுநாளுளதோ
தேசத்துவிளக்கேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௮௨)

ஒருகொடிநேரமுன்னடிமறந்தா
லுய்வதோர்வழியிலையந்தோ
விருதயத்தென்னுளிமைப்பொழுதேனு
மேகிடாதிருப்பதுமறியேன்
கருதிநானுனையெப்பொழுதுமேபோற்றக்
கழலடிநாக்கவுங்கண்டேன்
திருவருள்வேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௮௩)

உன்னைநானறிதற்குடையவல்லவனே
வுள்ளிருந்துணர்த்தநாடோறு
நின்னருள்வேண்டுவிமலனார்பாலா
நீதிநூலாதிநாயகனே
பொன்னருள்போற்றிப்புலனுடனீத்துப்
பூரணமாவதற்கெந்தாய்

சென்னியங்கிரியா திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (அ௪)

தப்பிதஞ்செய்யும்புலன்களைநீத்துத்
தணிகைமாமலையில்வாழ்முருகா
எப்பவுஞ்சிவமேமறந்திடாதடியே
னிடையறுதருகியோடி
யொப்பித்தேனுள்ளமுடல்பொருளாவி
யுடையவாவுன்னடைக்கலமாய்ச்
சிற்பரசிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (அ௫)

எந்தையேயிறைவாவினிக்கின்றவனியே
யெண்ணுதற்கரியமெய்ச்சிவமே
கந்தவேளென்றுகருதினைந்துருகிக்
காணுநாளெந்நாளுனையாய்
பந்தமாந்துன்பப்பல்லுயிர்யோனி
பாவியேன்புகுந்திடாவண்ணஞ்
சிந்தைமாமணியேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (அ௬)

மோனமாய்நாயேனடையவல்லவனே
முருகையர்முன்னின்றுகாட்ட
ஞானமாம்வாழ்வையடைவதேயல்லா
ளுடெலாமலைகின்றமனதை
யீனமாமைம்புலனடக்கவுமாமோ
வெந்தைநீவிவ்வகையுணாயாய்
தேனினுமினியதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (அ௭)

உலகதிற்பொய்யர்போலுளத்தின்கணைக்கை
யுத்தமருணர்த்தவர்செய்கை
மலமதையகற்றிமலமுளோர்போல
மாதவம்பெருக்குவர்மன்னர்
தலமெலாந்தானாய்ச்சங்கரன்றானாய்ச்
சண்முகாமுருகவென்றோதிச்
சிலைவடிவேலாதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௮௮)

முத்தமிழ்மோனமுருகசற்குருவே
முதிர்ந்தநற்பெரியவர்குணமா
யெத்திசையெங்குநிறைந்தநற்சோதி
யெவ்வகைப்பொருளிலுங்கலந்த
வத்தனேயரசேயருமறைப்பொருளே
யவுணர்வேரறுத்தசெவ்வேலா
சித்தனேசிவனேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௮௯)

மாலயன்முதலாய்வந்தசற்குருவே
மலைறயவர்மனத்துண்மாசறுத்த
வேலவாவேந்தர்நெறியதாய்நின்று
மெய்ச்சுடர்விளக்குமாயெங்குந்
ஞாலமாய்நிறைந்தசண்முகத்தரசே
தமியனேன்வல்வினையகற்றுஞ்
சேயேசிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௯௦)

வானவர்பொருளேமணநிறைமலரோ
வல்லவாவவுணர்வேரறுத்த

மோனமெய்ப்பொருளேமுருகசற்குருவே
முடிவிலாதகண்டமாய்நின்ற
ஞானமெய்ப்பொருளேநான்மறைமுடிவே
நாயினேன்வல்வினையகலத்
தேனமர்பொருளேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (கக)

உன்னடிகண்டவுத்தமர்பதத்தி
லொருமனதாகிநாடோறுஞ்
சந்நிதிகண்டுதாழ்ந்தடிடணிவோர்
தாமுறும்பவக்கடனீந்தித்
தன்னுருக்காண்பர்சங்கரனேனை
தவமுளோர்நூலெலாஞ்சொல்லுஞ்
சென்னியங்கிரியாய்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (கஉ)

அண்டநாயகனுரகண்டமாய்நிற்கு
மடியிணையறிந்தநோரளவிற்
சண்டதோருலகங்கானவிற்சலமாங்
கனவொடுமெலடிதன்சேய்போ
லெண்டிசையெங்குமிளமுயற்சோடா
மெய்ப்பொருளொன்றதாய்மயின்மேற்
சென்டடித்தேறுந்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (கங)

அல்லிலும்பகலுமரகராவென்றே
யகங்குழைந்துருகுநாளுளதோ
மல்லர்போல்வாதாய்மனம்புலனோடு
மைந்தனுறுழன்றலையாமற்

கல்விநும்வலியநெஞ்சிருள்விலகக்
கத்தனேசருளைதந்தாளாய்
தில்லைமாமணியேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௯௪)

அழுதழுதுன்னையேதினந்தினம்பாவி
யல்லலைக்களையுநாளுளதோ
கழுதையாம்புலன்களிழிவெறும்யோனி
கருதியேயுழன்றலையாமல்
வழுவிலாவடியார்பாதமேசேர
வந்தநீபுலன்களைத்தடுப்பாய்
தொழுதுநாளுமுன்றந்திருவடியடைந்தேன்
சோதியேதண்டபாணியனே. (௯௫)

விடிவதன்முன்னேவெண்பொடிபூசி
வேலவாவென்றநாடோறு
மடிடணிச்சேத்தியகங்குழைந்துருக
வரனடிகாண்பரிதுண்மை
முடிவிலாமோனமுருகனாரானை
மும்மலமகன்றிடமெந்தோ
செடிமலர்சூடுந்திருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (௯௬)

நின்னருள்பெருகநித்தியமெழுந்து
நீறுமெய்முழுவதும்பூசிப்
பன்னகாபரணன்பெற்றமாமுருகன்
பதம்பணிந்தழுதுநாடோறுஞ்
சந்நிதிசென்றுதாழ்ந்துநின்றேத்தத்
தன்னுருக்காண்பரிதுண்மை

யன்னையேயட்பாவடியன்வர்தனடர்தே
னன்டனேதண்டபாணியனே. (கூஎ)

துட்டராயறத்துச்சிட்டரைக்காக்குந்
துரியமேசோதிவேல்முருகா
மட்டிலாமாயைச்சுழல்வழியேமி
மயங்கியேயுழன்றிடாவண்ண
மிட்டமாயடியேனிருவினைநீக்கு
மேகமேயோகநாயகமே
சிட்டனேசிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (கூஅ)

முத்தமிழ்வேதமூவராய்வந்த
முருகனைப்போற்றுநற்பெரிய
பத்தரைப்பணிந்துபவவினையகற்றிப்
பதமருள்பெருகுநாளுளதோ
புத்தரைவென்றபூரணன்றன்னைப்
போற்றியேயகங்குழைந்துருசத்
தித்திக்குஞ்சிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (கூகூ)

மெய்யடியார்கள்பாதமேசேர
மெய்யனேநின்னருள்வேண்டிப்
பொய்யெலாநீத்துப்போதமெஞ்ஞான
பூரணத்தொட்டிலிற்றூங்க
வையனேயரசேயருடரவேண்டு
மப்பனேசெப்பினேன்கண்டாய்
செய்யனேசிவமேதிருவடியடைந்தேன்
செல்வமேதண்டபாணியனே. (க00)

ஒன்பதுபேர்தம்பிமார்துணைவரென்று
    மொருலட்சம்வீரர்களுங்காவலென்றும்
அன்புமிகுத்தடியார்களிலுறஞ்செயேத்த
    வடல்கொண்டசிவகணக்களணியாளாகி
வம்புமிகுமவுணர்களைவேலால்வாட்டி
    வானவரைக்குடியேற்றிப்பொதிகைமேவிக்
கும்பமுனிக்கன்றுசிவபோதஞ்சொன்ன
    குமரனைநின்னிருதாள்போற்றிபோற்றி. (௧0௯)

---

உருவையொடுகோடிபலவிதங்களண்டா
    தெப்பொழுதுமிம்மாலையுருகியோதக்
கனிதரெனுகோலபயமேதுமில்லை
    கடவுளர்க்குப்பொருளுரைத்தகந்தனுனை
ஒளிவிலொருமுடிவுண்மைதோன்றியப்பா
    வோதாமலொருமொழியாலோதிக்காட்டி
யழியாதபதம்பெறுவரண்ணலானை
    யறுபூதியருள்கண்டுவாழ்வர்தாமே.

தண்டாயுதபாணிமாலை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவகிரிமாலை.



ஒருபொருளேபலபொருளாயுலகமாகி
யுன்றெய்வமென்றெய்வமென்றவேறாய்க்
கருவுருவாஞ்சீவர்களைவெவ்வேறாக்கிக்
கபடனேயிருவினையாங்கயிற்றிற்கோத்துச்
சருவமுநின்றாட்டுவிக்குந்தம்பிரானைச்
சண்முகனார்கிருபையதாற்காணலாகுந்
திருவருளுன்றிருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௧)

ஆடுகின்றசெகசாலக்கூத்தையெல்லா
மாரறிவாரறிஞர்களேயறிவதல்லாற்
சாடுகின்றமாயவலைச்சுழலிற்பட்டோர்
சண்முகத்தின்செயலதனையறியப்போமோ
கூடுகின்றதுறையறிந்துகூடிக்கண்டோர்
குவலயத்திற்பலபொருளென்றெண்ணவொண்ணாத்
தேடரியதிருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௨)

சிவனென்றும்விஷ்ணுவென்றுந்திறக்கப்போமோ
செகமாயைகடந்தான்றன்செயலைக்கண்டோ
ரவமானபவக்கடலையகற்றியேறி
யகண்டசிவபூரணமாயளவிடாதாய்த்

தவமானதற்பரமாய்ச்சகங்களெல்லாந்
　தானாகித்தன்மயமாய்த்தனித்தொன்றாகிச்
சிவமானதிருவடியென்றலைமேல்வைப்பாய்
　சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௩)

தவமேவச்சிவபதத்தைப்போற்றாரெல்லாந்
　தரணிதனிற்பதின்மூன்றுகுணங்கண்மேவி
யவமானபவக்கடலிலழுந்தச்செய்யு
　மாணவத்தாலழுந்துவாரவரெந்நாளும்
பவமானமாயைவலைச்சுழலிற்பட்டுப்
　பரம்பொருளையெவ்விதத்துமறியவொண்ணாச்
சிவமானதிருவடியென்றலைமேல்வைப்பாய்
　சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௪)

சிவமானவித்ததுவையிகழ்ந்துபேசித்
　திருமாலேவித்தென்றுசெப்புவோரைப்
பவமானமாயைவலைச்சுழலிற்றள்ளிப்
　பரதவிப்பொழுகையிற்பிறந்திறந்து
எவராலுங்கூறவொணாநரகில்வீழ்வா
　ரெந்தைபிரான்சிற்சொரூபங்காணவொண்ணாச்
சிவமானதிருவடியென்றலைமேல்வைப்பாய்
　சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௫)

சிவமானவித்ததுவேவிளைவுமாகிச்
　சிதாகாயவடிவதனிற்றிருமாறோன்றித்
தவமானசதுர்முகனுமதனிற்றோன்றிச்
　சகலவுயிர்தானுமுடிவுதன்னை
யவமானவாணவத்தைவிட்டோர்காண்ப
　ரசடராலம்முடிவையறியவொண்ணாச்
சிவமானதிருவடியென்றலைமேல்வைப்பாய்
　சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௬)

ஒருமாலாயவதரித்துக்கம்சன்வீழ
ஓடறுத்தேயுலகதனைக்காக்கவேண்டிக்
கருமாலாய்ப்பாண்டவர்க்கோரடிமையாகிக்
காருண்யவடிவான கருணைதன்னை
வெருமாலாமாயைவலைச்சுழலிற்பட்டோர்
வேலவர்தம்முடிவதனையறியவொண்ணுத்
திருமாலுன்றிருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (எ)

திருமாலாமென்றவொருபூமிதன்னிற்
சிவமானவித்ததனைச்செறிந்தபேர்க்கு
வொருமாலாயவதரித்துமாயைநீங்கி
யுடலிலுளகருவியெலாமொருங்கநீத்து
வெருமாலாமாணவத்தைப்போக்கியேறி
வேதாந்தவெட்டவெளிவிளக்கொன்றுன
திருமாலுன்றிருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (அ)

அஞ்சுபஞ்சபூதமதேயவனியாகி
யாறெனுமோர்பூதந்தனையாருங்காணர்
மஞ்சுலவுங்குழலுமையுங்கங்கைதானும்
மாதுவள்ளிதெய்வானைவடிவதாகிச்
செஞ்சடையிற்கொன்றைமலரணிந்தோன்றனுஞ்
செந்தில்வடிவேலனொவந்துதோன்றிச்
செஞ்சுடருன்றிருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (கூ)

பன்னிரண்டெண்ணதனைத்திறக்குநாளிற்
பற்பலவாமுலகமெலாம்பஸ்பமாகித்

தன்னருளே தன்வடிவாய்த்தானே தானாய்ச்
சகமுழுதும்வெண்ணிருய்நீத்தகால
மின்னதெனவீசனிடசொருபங்காணு
விடமடையவெப்போதுமனுகவொண்ணுச்
சின்னவிருபாதமென்றன்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (கo)

கலிபிறந்தநாளெல்லாங்கடவுளாணாக்
கருதுவார்வெவ்வேருய்க்கலிவந்தெய்திப்
பலபலவாஞ்சமயநெறியானாவறும்
பற்பலவாந்தெய்வநெறியானவாறு
மொலிபிறந்தவிடமதனைக்கண்டோர்க்கெல்லா
முக்ரவடிவேலரிடமுடிவுகாணுஞ்
சிலவடிவாந்திருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (கக)

முப்பாழிலுழன்றலைந்துழலுவோர்கள்
முழுமுதலாயொன்றுனமோனந்தன்னை
யெப்போதுங்காண்பதற்குவழிதோணும
லியம்புவாரீசனடிவெவ்வேருக்கிக்
குப்பாயக்குழிவீழ்வர்காமநோயாற்
கொடும்பாவமிகத்தேடுங்கூகைமாந்தர்
செப்பாததிருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரியேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (கஉ)

இந்திரனேடயன்மாலுந்தேவர்யாரு
மெப்போதுமவுணராலிடுக்கணுற்றுச்
சிந்தைநொந்துசிவசிவாவென்றநாளிற்
சிறுகுழந்தைவடிவாகித்தேவதேவ

வந்தரமாயவுணர்குலமழிந்துவீழ
வாறுமுகமொடுமேவிச்செந்தூர்சென்றோன்
சிந்தைவளர்திருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (கங)

காருகந்தமேனியனுமயனுங்காணுக்
கடவுளர்க்குப்பொருளுரைத்தசெயலுமாகிப்
போருகந்துகிரவுஞ்சம்பிளந்துவீழப்
போர்வீரர்தமையெழுப்பும்பொலிவுமேவிக்
காருகந்தவவுணர்குலக்கருவறுத்துக்
கடுகிவர்தமயிலதனைக்கவர்ந்தங்கேறிச்
சீருகந்ததிருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (கச)

வல்லமையிற்பெரியோனுய்வடிவேலோச்சி
வாளவுணர்குலமறுத்துவானுடெல்லாஞ்
சொல்லரியதவமியற்றுந்தேவர்வாழத்
துணையாகவந்தவொன்றேதுரியவாழ்வே
புல்லனெனைப்பழவடியர்பாதஞ்சேர்த்திப்
புலனகற்றிப்பொய்வாழ்வைப்போக்கியேறத்
தில்லைவளர்திருவடியென்றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (கரு)

ஈனமொனுமவுணர்குலமறுத்துத்தள்ளி
யிந்திரனைக்குடியேற்றிப்பெண்ணுங்கொண்டாய்
வானவர்கள்சேனுதிபதியுமென்று
வணங்கடந்தவேள்விமலையருகிற்சென்று
கானவர்கள்வளர்த்தெடுத்தகன்னிதன்னைக்
கபடாகமணம்புணர்ந்துகலவையாடு

தேனினியதிருவடியென் றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௧௬)

ஞானமெனுமுதற்பொருளைநாட்டிக்காட்டி
நாதாந்தவெட்டவெளிச்சுடராயொன்று
மீனனிவனென்றுமிகவிகழ்ந்திடாம
லெளியேனைக்கவர்ந்தப்பாலிதுவென்றோதி
மோனநிலைமுடிவளித்துமுத்திகாட்டி
முப்பாழுக்கப்பாலாய்முடிந்தொன்றான
தேனமருந்திருவடியென் றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௧௭)

ஆரேனுமடைந்தவரைக்கொண்டப்பாலா
யருண்ஞானகுருவாக்கியகண்டமாகித்
தேராதசிந்தையதைத்திருத்தியாண்டு
திறமானதத்வமசிமுடிவுங்காட்டிக்
காரானைமுகத்தவனார்வடிவுங்காட்டிக்
கடவுளர்க்குப்பொருளுரைத்தசெயலுங்காட்டிச்
சீரானதிருவடியென் றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௧௮)

அத்திமுதலெறும்பீறாயனைத்துமான
வாருயிருந்தன்னுயிராயறிந்துநோக்கிப்
பத்திநெறிவழியேயறிப்பரனையுள்கிப்
பலநூலின்முடிவதுவாம்பொருளுங்கண்டு
சித்தமொடுபுத்திமனஞ்சேர்ந்தொன்றாகித்
தினந்தோறுஞ்சிவகுருவென்றேத்துவோர்க்குந்
தித்திக்குந்திருவடியென் றலைமேல்வைப்பாய்
சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௧௯)

சங்குல்பகலற்றவிடங்காட்டியாண்டு
  சனமென்றதிரியவத்தைகடந்தப்பாலாய்ச்
சங்கரனாடுகின்றசபையுங்காட்டித்
  தனித்துநின்றுசகமுழுதுந்தானாய்க்காட்டித்
தங்கவடிவேலெடுத்தசாமிநாதா
  சரணடைந்தவடியானைத்தடுத்தாட்கொண்ட
செங்கரும்பின்றிருவடியென்றலைமேல்வைப்பாய்
  சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௨௦)

புத்தரொடுசமணர்மதமழிந்துவீழப்
  பொய்த்துழலுஞ்சமயநெறிபோக்கியப்பாற்
சுத்தசைவநெறியதுவேமுத்தியென்றுஞ்
  சுருதிநூல்வேதமெலாந்துலங்கச்செய்தும்
பத்திவலைப்பட்டவனேகாண்பனென்றும்
  பரம்பொருளேவந்தருளித்தடுத்தாட்கொண்டு
தித்திக்குந்திருவடியென்றலைமேல்வைப்பாய்
  சிவகிரிமேனின்றிலங்குஞ்செல்வத்தேவே. (௨௧)

இம்மாலைமனமுருகியேத்துவோர்கட்
  கிருதயத்திற்சரிதைவழிகிரியையோகம்
பெம்மானார்கிருபையினாற்பெறுவர்நாளும்
  பெரியோர்கள்பாதமதைப்பேணியேறிச்
சும்மாவேயிருக்கின்றதுரியந்தோன்றுஞ்
  சூரர்குலங்கருவறுத்தமுருகனாணை
யும்மானாரடிபெறுவரண்ணலாணை
  யழியாதவீடுபெற்றுவாழ்வர்தாமே. (௨௨)

சிவகிரிமாலை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# அவையடக்கம்.

———:o:———

நால்வர்கள்பாடறன்னைநாடொறும்பத்திசெய்து
மாலுடனயனுங்காணுமௌனத்திலுநித்தமாலை
சாலவுமுலகில்யாவுஞ்சாந்தமாம்பெரியோர்கொள்வர்
சூலனார்சொன்னசொல்லாற்றோன்றியதருட்பாவாமே.

சாதனநான்கினோடுதழுதழுந்தழுதுவாழ்த்திப்
போதமாநால்வர்பாடற்போற்றிசெய்துருகியேத்தி
ஓதியேயொன்றாய்த்தோன்றியுரையற்றமவுனந்தன்னில்
நாதனார்சொன்னசொல்லால்நாட்டியதருட்பாவாமே.

ஆலமாம்விடமுண்டையனந்தணனாகிவந்து
சாலவுந்தானேதானாய்த்தம்பிரானென்றாய்மேவிச்
சீலமாயுநித்தமாலைதினந்தினமேத்தவல்லார்
சூலனார்தனக்காளாகித்தொண்டர்க்குந்தொண்டராமே.

திருச்சிற்றம்பலம்.

———

சிவனடியாரைச்சிவமாக எண்ணிநம்பினபேருக்குச்
சருவபாவமும் நீங்குமென்றசுருதி.

அந்தணர்களருவையர்களனந்தங்கோடி
யாவுநூறாயிரந்தான்வதைத்தபாவம்
முந்தியுரக்கங்கைநதிமுற்றுமூழ்கி
மூவேழுபுரிக்கிடினுமுயன்றார்தீரா
தெந்தைபிரானடியாரையிறைஞ்சியேத்தி
யிருபாதந்தனைவிளக்கியன்னீர்மூழ்கிச்
சிந்தையுரப்பரிசலநற்சேடங்கொண்டாற்
சிவனாணைதிருமதுதின்னக்தானே.

———